இனி, இயைதல் என்பது அசைவகை ஒன்றொன்றினோடு தொடர்ந்தவழியல்லாற் சீர்க்கு [1] அலகு பெறலாகாதென்றவாறு; எனவே, அவ்வாறு இயைபுபட்ட நின்றனவாயினும் புணர்ச்சி யெய்துமென்பதாம். மற்று, இற்றது என்றதென்னை? சீரென்பது தொழிற்பெயராதலால் [2] அது சீரியைந்து எனவே பெறுதுமெனின்,—அங்ஙனங் கொள்ளிற் சீரியைந்த தொடரெல்லாங் கூடி ஒரு சீராய் செல்லுமாகலின் இடையிடை இற்றுவரல் வேண்டுமென்றற்கு அங்ஙனங் கூறினானென்பது; [3] இதனானே ஓரொவழிப் புணர்ச்சி விகாரம் எய்தாமையுங் கூறினானாம்.

"வண்டுபடத் ததைந்த கண்ணி." (அகம். க)

என்புழி, வல்லெழுத்து மிக்க புணர்ச்சிவகையானே சீரியைந்தன.

"பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து." (யா. வி. ப. ௩௮0)

என்றவழி, ஒன்றொடொன்று தொடர்ந்ததேனும் இற்றது என்பதனான் இயைபுபட நின்றவாயின்,

[4] "எல்லா இறுதியும் உகர நிறையும்." (தொ. எழு. ௪0அ)

என்றதனாற் குற்றுகர முற்றுகரமாகாது நாலெழுத்தடியாயிற்று. இதனை [5] எழுத்தடியென்றிலே வலியுடைத்து; வல்லொற்றுத் தொடர்மொழிக் குற்றுகரத்தால் நாலெழுத்தடி

1. அலகு பெறல்—ஈரசை மூவசை என்று அலகு பெறல். அலகு—எண்.

2. அது என்றது—இற்றதை.

3. இதனானே—இற்றதென்றதனானே. ஓரொவழிப் புணர்ச்சி விகாரமெய்தாமை என்றது, பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து என்ற உதாரணத்தில் பேர்ந்து என்பதன்கணுள்ள உகரம், எல்லாவிறுதியு முகர நிறையும் என்ற புணர்ச்சி விதியைப் பெறுமையை. பெறுமாயின் முற்றுகரமாகக் கொள்ளப்பட்டு, வருஞ் சீராகிய சென்று என்ற சீரோடு சேர்ந்து பேர்ந்து சென்று என நின்று நேர் நிரைநேர் என மூச்சீராகவுங் கொள்ளப்படும். இற்று (பிரிந்து) நிற்றலினாலே அவ்விதி பெறுமல் குற்றுகரமாகவே கொள்ளப்பட்டு நாலெழுத்தடியாயிற்று என்றபடி. சார்ந்து என்பதற்கும் இவ்விதி ஒக்கும்.

4. எல்லாவிறுதியு முகர நிறையும் எழுத்ததிகாரம் ௪0அ-ம் சூத்திரம். (நிறையும் என்றதனால் குற்றுகரம் முற்றுகரமாக வைக்கப்படும் என்பது கருத்து. இது ஒரு வழுவமைதி என்பர் பேராசிரியர். (செய். 310-ம் சூத்.)

5. எழுத்தடி—நாலெழுத்தடி என்றிருப்பது நலம். ஓரொற்றுச் சீர் நான்காய அடி.



வேறுண்மையின். ஈரசைகொண்டும் எனவும், மூவசைபுணர்ந்தும் எனவும் கூறினமையான் ஒருசீர் பலசொல் தொடர்ந்தவழியும் அவை ஒன்றுபட நிற்றல்வேண்டு மென்றவாறும். எனவே, உலகத்துச் சொல்லெல்லாம் ஈரசையானும் மூவசையானுமன்றி வாராவென்பது பெற்றாம். இதனானே ஒருசொல்லைப் பகுத்துச் சீர்க்கு வேண்டுமாற்றான் வேறு சீராக்கியவழியும், அச்சீர்வகையானே வேறு சொல்லிலக்கணம் பெறுமென்பதுங் கொள்க; அது,

"மம்மர் நெஞ்சினேன் [2] தொழுதுநின் றதுவே." (அகம். ருக)

என்புழி, நின்றது என்னுஞ் சீர் குற்றுகரவீற்றுச் சொல்லன்றே, அதனைப் பிரித்து அதுவே என வேறு சீராக்கவே அது முற்றுகரமாகி வேறுபடுதல் கண்கூடாக் கண்டுகொள்க; என்றார்க்கு 'எனப்படும்' என்றதென்னையெனின்,—[3] ஓரசையே சீர்நிலை பெறுமென்றுமாயினும், அவை சீரென முன்னோதப் படாவென்றற்கென்பது. மற்று [4] நாலசையானும் ஐந்தசையானும் உண்ணாநின்றான் அலங்கரியா நின்றானெனச் சொல் வருவன

1. உண்மையின் வலியுடைத்து என இயைக்க. வல்லொற்றுக் குற்றுகரத்தால் நாலெழுத்தடி வேறுண்மையினென்றது 'போட்டுப் போட்டுப் போட்டுப் போட்டு' என வன்றொடர்க் குற்றுகரத்தான் வரின் டகரவுகரம் அடுத்த சீரோடு முற்றுகரமாக நின்று சேரமுடியாது வல்லொற்றுப் பிளவுபட்டுக் குற்றுகரமாகவே நிற்றல்பற்றி. எனவே 'பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து' என்பது அவ்வாறு பிளவுபட்டிசைத்துக் குற்றுகர வோசையை வன்றொடர்போலத் தாராதாயினும் வன்றொடர்க் குற்றுகரம் எப்படி நாலெழுத்தடியாகக் கொள்ளப்படுகின்றதோ அதுபோல இதுவும் இற்றுவருதலாற் கொள்ளப்படும் என்பது கருத்து.

2. தொழுதுநின்றதுவே என்பது தொழுதுநின் றதுவே எனப் பிளவுபட்டு வேறு சீராயவழி முற்றுகரமாகிப் புணர்ச்சியும் பெற்றது என்றபடி. நின்றதே என்பது குற்றுகரப் புணர்ச்சி. அதுவே எனப் பிரிந்து உடம்படு மெய் பெற்றது முற்றுகரப் புணர்ச்சி. இவ்விதி சிறுபான்மை.

3. ஓரசை—நேர்பு நிரைபு. இவை சீராயினும் சீரென் றோதப்படா. ஓதில் அசைச்சீர் என விதந்தோதுப. முன்—னன்னர். இது வேண்டியதில்லை.

4. நாலசையானும் ஐந்தசையானும் வருஞ்சீர் என்றது பின்வரும் 'உண்ணாநின்றான்', 'அலங்கரியாநின்றான்' என்பவைகளை. உண்ணாநின்றான் இது நாலசை. அலங்கரியாநின்றான் இது ஐந்தசை. இரண்டுசொல் விழுக்காடுபட நிற்றல் என்பது

ளவாரெலனின்,—அங்ஙனம் வருஞ் சொற்கள் சிலவாகலானும், அவைதாமும் இரண்டுசொல்விழுக்காடாய்ப் பிளவுபட்டு நிற்ற லின் ஒரு சீரெனப்படாமையானும், அவை சீராக வருஞ் செய்யுளின்மையானும் என மறுக்க.

இனி [1] வஞ்சிப்பாவினுள் வந்த ஆசிரியவடியினை நாலசைச் சீர் காட்டல்வேண்டுவார் இருசீரடியாக உரைப்பினும் அவை தூங்கலோசையிலவாகலானும் அவை சீரியைந்திறுதலின்மையா னுங் கொள்ளாரென்பது. சண்டு எனப்படும் என்பதேபற்றி [2] நாலசைச்சீர் கொண்டாரும் உளர். ஐயசைச்சீர் கொண்டாரைக் கண்டிலமென்க. (௧௨)

[ஈரசைச்சீர் இவையெனல்]

௩௨௫. இயலசை மயக்க மியற்சீ ரேனை
யுரியசை மயக்க மாசிரி யுரிச்சீர்.

இது, நிறுத்தமுறையானே இயலசையும் உரியசையும் வேறு வேறு தம்முண் மயங்கிவரும் ஈரசைச்சீருணர்த்துகின்றது.

---

'உன்னு.' என்பது ஒரு சொல்லும், 'நின்றுன்' என்பது ஒரு சொல்லும், 'அலங்கரியா' என்பது ஒரு சொல்லும், 'நின்றுன்' என்பது ஒரு சொல்லுமாகப் பிரிந்து இரண்டுசொல் விழுக்காடு பட நிற்றலே. விழுக்காடு—விழுதல்.

1. இரு சீரடியான் வரும் வஞ்சிப்பாவினுள் நாற்சீரானுய ஆசிரியவடி மயங்கி வருதலுமுண்டு. அவ்வாசிரியவடியினை நாலசைச் சீராக்கி இருசீர் வஞ்சியடியாகவுங் காட்டலாம். அங் ஙனங் காட்டின் நாலசையாகப் பிரிக்கப்பட்ட அவ்விருசீரடி யானே வஞ்சிக்குரிய தூங்கலோசை பிறவாமையானும், அந் நாலசைச் சீராகக் காட்டிய இருசீரடி, ஆசிரியவடியைப் பிளந் துச் சேர்த்தமையினாலே இருசீரியைந்து ஒருசீராக நில்லாமை யானும் அந்நாற்சீரடியை ஆசிரியன் கொள்ளான் என்றபடி. நாற்சீர் கொண்ட ஆசிரியவடியினை இருசீரடியாகப் பிரிக்கலாம் என்பதற்கு உதாரணம்:—

"அகநகர் வியன் முற்றத்துச்
சுடர்நுதன் மடநோக்கி
னேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை."

என்னும் பட்டினப்பாலை யடிகளுள், பின்வந்த அகவலடியிரண் டும் நாலசை வஞ்சிச்சீராகப் பிரித்தற்கேற்றவாறு காண்க.

2. நாலசைச்சீர் கொண்டார் சிறு காக்கைபாடினியார்; அமுதசாகரர் இதனைப் பொதுச்சீர் என்பர்.



இ—ள்: நேர்நேர் நிரைநேர் நிரைநிரை நேர்நிரை என்பன நான்கும் இயற்சீர்; நேர்புநேர்பு நிரைபுநேர்பு நிரைபுநிரைபு நேர்புநிரைபு என்பன நான்கும் ஆசிரியவுரிச்சீர் என்றவாறு.

இவற்றுள் இயற்சீரைத் தேமா புளிமா கணவிரி பாதிரி எனவும், வாய்க்கால் வாய்த்தலை தலைவாய் அலைமுகம் எனவும் (யா. வி. ப. ௩௩) பிறவும் இன்னோரன்ன வேறுவேறு காட் டுப. இனி வருவனவற்றிற்கும் இஃதொக்கும். ஆசிரியவுரிச் சீரை வீடுபேறு வரகுசோறு நடவுமருது பாறுகுருகு. என வுங் காட்டுப; அவற்றுக்குச் செய்யுள்:

"அவரே, கேடில் விழுப்பொருள் டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே." (குறுந். ௨௧௬)

என்புழி,

[1] "கேடில் விழுப்பொருள் டருமார் பாசிலை."

என நான்கு இயற்சீரும் வந்தன.

"வெளிற்றுப்பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்ப."
(புறம். ௩௫)

எனவும்,

"வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்."
(முருகு. ௧0௬)

எனவும்,

"பூண்டுகிடந்து வளரும் பூங்கட் புதல்வன்."

எனவும்,

"நறவுண் மண்டை நுடக்கலி னிறவுக்கலித்து." (அகம். ௩௬)

எனவும் வரும். இவற்றுள் [2] வீற்றுவீற்று எனவும், வசிந்து வாங்கு எனவும், பூண்டுகிடந்து எனவும், இறவுக்கலித்து என வும் நான்காசிரியவுரிச்சீரும் வந்தவாறு கண்டுகொள்க. பிறவு மன்ன.

---

1. கேடில்—நேர்நேர்,—தேமா.
விழுப்பொருள்—நிரைநிரை,—கணவிரி.
தருமார்—நிரைநேர்,—புளிமா.
பாசிலை—நேர்நிரை,—கூவிளம்.
} இவை இயற்சீர் நான்கு.

2. வீற்றுவீற்று—நேர்புநேர்பு,—வீடுபேறு.
வசிந்துவாங்கு—நிரைபுநேர்பு,—வரகுசோறு.
பூண்டுகிடந்து—நேர்புநிரைபு,—பாறுகுருகு.
இறவுக்கலித்து—நிரைபுநிரைபு,—நடவுமருது.
} இவை ஆசிரிய உரிச்சீர் நான்கு.

மற்று, இயலசையும் உரியசையும் விரவி இயற்சீரானவை இலவோவெனின்,—உள; அவையன்றே மேற்சொல்கின்றன வென்பது. அஃதேல், இவ்விரண்டும் இயற்சீராகாவோவெனின்,—அன்ன என்று மாட்டெறிந்த கருத்தினான் அதுவும் அமையுமென்பது; என்றார்க்கு, இவற்றை ஆசிரியவுரிச்சீரென்றல் குற்றமாம் பிறவெனின்,—பெரும்பான்மையும் ஆசிரியத்திற்கும் அகத்தனவாகிய வஞ்சிக்கும் உரியவாகலானும், ஒழிந்த இரண்டு பாவின்கண்ணுஞ் சிறுபான்மையினவாகலானும், வெண்பாவினுள் கட்டளையடிக்கண் வாராவென்பது,

"கலித்தலை மருங்கிற் கடியவும் படாஅ." (௯.௩.௯)

என வரைந்தமையாற் பெறுதுமாகலானும் இவற்றை ஆசிரியவுரிச்சீரென்றலே வலியுடைத்தென்பது. [1] அன்ன என்பதனை இயற்சீரொடு மாட்டுங்கால் ஈற்றது அதிகாரப்பட இறுதி நின்ற நிரையீற்றியற்சீரிரண்டனோடுங் கொள்ளப்படும்; கொள்ளவே, அம்முறையானே நீடுகொடி என்பதனைப் பாதிரிபோலவும், குளிறுபுலி என்பதனைக் கணவிரிபோலவுங் கொள்ளப்படுமென்பதாம்.

அவை செய்யுளுள் வருமாறு:—

[2] "ஓங்குமலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ." (புறம். ௫௫)

எனவும்,

[3] "உவவுமதி யுருவி னோங்கல் வெண்குடை." (புறம். ௩)

எனவும்,

"ஓங்குதிரை வியன்பரப்பின்." (மதுரை. ௧)

எனவும்,

"நிலவுமணல் வியன்கானல்" (புறம். ௧௭)

எனவும் இவை [4] ஆசிரியத்தானும் வஞ்சியுள்ளும் வந்தவாறு.

1. அவ்வாறாகும் இயற்சீர்போலவாகும். அதனொடு மாட்டுங்கால் அதன் ஈற்றினுள்ளதாய் அதிகாரப்பட்டு நின்ற நேர்நிரை, நிரைநிரை என்னுமிரண்டனோடும் மாட்டப்படும் என்றபடி. நேர்நிரை—பாதிரி. நிரைநிரை—கணவிரி. ஈற்றது—ஈற்றினுள்ள நிரை.

2. ஓங்குமலை—நீடுகொடி = பாதிரி.

3. உவவுமதி—குளிறுபுலி = கணவிரி.

4. முன்னிரு செய்யுளடிகள் ஆசிரியத்தானும் பின்னிரு செய்யுளடிகள் வஞ்சியுள்ளும் வந்தன.



"ஓங்குநிறை யன்னந் துயில்வதியுஞ் சோணாட்டே."

எனவும்,

"மடுகொடி யாக வெழுதுகோ." (முத்தொ. ௫௦)

எனவும் இவை வெண்பாவினுள் கட்டளையடியல்வழிச் சிறுபான்மையான் வந்தன. மற்றிவையுங் கட்டளையடியென்னுமோ வெனின்,—அற்றன்று; அவை தளைவகை கொள்ளுந் [1] துணையின்னேனைத்தன்றென்பது,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி." (௩.௨.௬)

என்பதனுளுணர்க. [2] இப்பகுதியறியாதார் அடியுறழ்ந்ததனைப் பயனின்மையென்றிகழ்ப. (௧௪)

[உரியசைப்பின் நேரசைவருஞ் சீர் இயற்சீராமெனல்]

## ௩௨௭. நேரவ ணிற்பி னியற்சீர்ப் பால.

இஃது, இயலசை உரியசை மயக்கத்துப் பிறப்பன இரண்டியற்சீர் உணர்த்துகின்றது.

இ—ள்: முன்னர் உரியசைப்பின்னர் நிரையசை வரின் ஆசிரியவுரிச்சீராமென்றான்; அவ்வதிகாரத்தால் உரியசையிரண்டன்பின்னும் நேரசை வரின் அவையிரண்டும் இயற்சீர்ப் பாலவாம் என்றவாறு.

அவை: நேர்புநேர் நிரைபுநேர் என வரும்.

உதாரணம்:—சேற்றுக்கால் வேணுக்கோல் களிற்றுத்தாள் முழவுத்தோள் என வரும். நீத்துநீர் குளத்துநீர் போதுபூ விறகுதீ எனவுங் காட்டுப. பிறவுமன்ன. இவை இயற்சீர் நான்கினுள்ளும் எப்பாற்படுமெனின்,—[3] அதிகாரத்தால் நீடுகொடி குளிறுபுலி என்பனபோல இறுதிநின்ற பாதிரி கணவிரிப் பாற்படும் முறையானென்பது. எனவே, போதுபூ பாதிரியாகவும், விறகுதீ கணவிரியாகவும் இயற்றப்படுமென்பது. இவ்வாறு

1. துணை—அளவு.

2. இப்பகுதி—கட்டளையடிக்கண் வருதலும், அல்லாத அடிக்கண் வாராமையும் என்ற பகுதி. உறழ்தல்—பெருக்கல். கட்டளையடி, அல்லாஅடி என்று வகுத்துணர்தல் ஓசைபற்றி என்பது இதனால் அறியப்படுவது பயன் என்றபடி.

3. அதிகாரத்தால்—இறுதியில் நிரையீறு அதிகாரப்பட்டு நின்ற அதிகாரத்தால்.

கூறவே, [1] இவை பாதிரி கணவிரிபோல [2] அசை திரிந்து நிரையாமென்பது சொல்லாற்க. நேர்பு நிரைபு முதலாக நிரையீறாகிய சீர் தளை கொண்டாற்குக் கொள்ளப்படும் இவையுமென்பதாம். தளைகோள் ஏனைக்கும் எனவே [3] எழுத்தளபுள்ளும் இவற்றை ஒன்றென்றனுள் அடக்குமென்று அடக்கற்க; என்னை? [4] இவை வேறுவேறுபட்ட அசையான் வேறுவேறு சீராமெனமையினென்பது. அசைச்சீர்க்கு உரிச்சீரெனக்கணபின்மையின் இதற்கு இலக்கணம் வாராதென்றுணர்க.

[5] "நீத்துநீர்ப் பரப்பி னிவந்துசென் மான்றேர்."

என்புழி, போதுபூவும் விறகுதீயும் வந்தவாறு கண்டுகொள்க. இவற்றை [6] ஆசிரியவுரிச்சீர்ப்பின் வைத்ததென்னையெனின்,—இவையும் அவைபோல ஒன்றொடொருங்கியைதல் பெரும்பான்மையென்பது அறிவித்தற்கென்றுணர்க. (கரு)

[இயலசைப்பின் உரியசை வருஞ் சீரும் இயற்சீராமெனல்]

கூஉஅ. இயலசை யீற்றுமு னுரியசை வரினே
நிரையசை யியல வாகு மென்ப.

1. இவை—விறகுதீ போதுபூ முதலிய நேரீற்றுரிச்சீர்கள்.

2. அசைதிரிந்து நிரையாகாதென்றது—போதுபூ என்றவழிக் குற்றுகரமாகிய துவ்வும் நெடிலாகிய பூவும் இயைந்து நிரையீறாகாது நேர்பு என நின்றபடியே நேரைமாத்திரம் நிரையீறாக வைக்கப்படும் என்பது கருத்து. நச்சினார்க்கினியம் நோக்குக.

3. எழுத்தளபன்றது—ஆசிரியத்தளை இரண்டு, வெண்டளை இரண்டு, கலித்தளை ஒன்று, வஞ்சித்தளை இரண்டு.

4. வேறுவேறுபட்ட அசை என்றது இயலசையும் உரியசையும் சேர்ந்து வருதல்பற்றி. அசைச்சீர் என்றது ஈண்டு இயலசைச்சீரை. இயலசைச்சீர் நான்குனுள்ளும் நிரையீற்றுச் சீருள் நேர்பு நிரைபு முதலாகவரும் நிரையீற்றையும் நேரீற்றையும் அடக்கற்க என்றபடி. அசைச்சீர் என்பது இயலசைச்சீர் என்றாயினும் இயற்சீரென்றாயினும் இருத்தல்வேண்டும். முன்னும் பின்னும் இயலசை என்றே உரையுள் ஆளுதல் நோக்குக. இதற்கு—இயலசைச் சீர்க்கு. இஃது உரியசைபெற்று வருஞ்சீர்.

5. நீத்துநீர்—போதுபூ. நிவந்துசென்—விறகுதீ.

6. ஆசிரிய உரிச்சீரென்றது—நீடுகொடி, குளிறுபுலி என்னும் நிரையீற்றுச் சீரிரண்டையும். ஒருங்கியைதல் என்றது அவ்வாசிரிய வுரிச்சீர் இரண்டும் உரிச்சீரென ஒருங்கியைதல்போல இவ்வியற்சீரிரண்டும் இயற்சீரென ஒருங்கியைதல்.



இது, மேனின்ற இயற்சீரதிகாரத்தான் ஈரசைச்சீருள் இயலசை உரியசை மயக்கத்துள் ஒழிந்துநின்ற நான்கு இயற்சீரு முணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: [1] இயலசை இரண்டினின்னும் உரியசை இரண்டும் ஒன்று இரண்டு செய்து மயங்கி நான்காகுங்கால் அவ்விரண்டுரியசையும் இயலசை மயக்கமாகிய இயற்சீர் நான்கனுள் நிரையீற்ற பாதிரியும் கணவிரியும்போல வருஞ் சீரொடு ஒட்டும் என்றவாறு.

அவை நேர்நேர்பு நேர்நிரைபு நிரைநேர்பு நிரைநிரைபு என வரும். வருங்கால் நேர் முதற்சீர் இரண்டும் பாதிரிபோலவும், நிரை முதற்சீர் இரண்டும் கணவிரிபோலவும் கொள்ளப்படுமென்றவாறு. எனவே, இச்சூத்திரமுஞ் சீராமாறேயன்றிச் சீர் தளைக்குமாறுங் கூறியவாறாயிற்று. [2] இவற்றைப் போரேறு பூமருது கடியாறு மழகளிறு எனினும் இழுக்காது. (கசு)

[உயிரளபெடை சீர்நிலையாதலன்றி அசைநிலையுமாமெனல்]

கூஉகூ. அளபெடை யசைநிலை யாகலு முரித்தே.

இஃது, எய்தியதன்மேற் சிறப்புவிதி; மேல் எழுத்ததிகாரத்தோதப்பட்ட அளபெடையை ஆண்டு மொழியெனக் கூறினன், அவ்வாற்றானே அவை பெரும்பான்மையும் ஈண்டும் ஈரசைச்சீராகலின், ஈண்டுச் சீர் கூறியவாற்றான் எய்தி நின்றவற்றை எழுத்துநிலைமைப்படுத்து அசைநிலையும் வேண்டு[illegible]மையின்.

இ—ள்: அளபெடை மேற்கூறிய இயற்சீர் நிலைமையேயன்றி ஓரசைசீராய் நிற்றலும் உரித்து என்றவாறு.

1. இயலசைமுன் உரியசை வந்தன—நேர்நேர்பு, நேர்நிரைபு நிரைநேர்பு, நிரைநிரைபு என்பன. இவை இரண்டனுள் முன்னிரண்டும் பாதிரிபோலவும், பின்னிரண்டும் கணவிரிபோலவும் நிரையீறாக வைத்துத் தளை கொள்ளப்படும்.

2. இவற்றை என்றது நேர்நேர்பு முதலிய நான்கையும்:
நேர்நேர்பு—போரேறு. நேர்நிரைபு—பூமருது.
நிரைநேர்பு—கடியாறு. நிரைநிரைபு—மழகளிறு.
என்று வாய்பாடு கொள்ளப்படும்.

என்பவாகலின் அளபெழுந்தமொழி நேர்பும் நிரைபுமாகாவென்பது. அவ்வாறாயினும் [1] ஒரோர்கால் அளபெடை யுகரத்தைக் கூட்டி. நேர்புநிரைபுமென்றுமோ, காசு பிறப்பென்பன தேமா புளிமாவாயினவாறுபோலவெனின்,—[2] அவை தேமா புளிமா வாகாமையும், தளைவகையொக்குமத் துணையென்பதூஉம் மேற் கூறப்பட்டனவாகலின் அவைபோல இவையும் நேர்பசை நிரை பசையாகாவென்பது ; அல்லதூஉம்,

"நீட்டம் வேண்டி னவ்வள புடைய." (தொ. எழு. ௬)

எனப்பட்டது அளபெடையாகலானும்,

[3] "நாஉத்தலை." (அகம். ௨௯)

என்பதுபோலாது இயல்பாக வந்து இயைந்த எழுத்தாகலானும் [2] அவைபோல அளபெடை,

[4] "இருவகை யுகரமொ டியைந்தவை வந்தன." (௩௧௬)

என்படாமையானும், நேர்பசை நிரைபசையாகாவென்பது ; அற்றன்றியும், அவை நேர்பசை நிரைபசையாதல் ஒருவகையான் நேர்ந்தானெனினும் அவை நாஉத்தலை விரவுக்கொடியென்னுஞ் [5] சீராதற்கு இழுக்கென்னையெனவும்,

"நிரையிறு காலியு மாசிரிய வுரிச்சீர்."

எனவோதி ஆசிரியவுரிச்சீர் எட்டென்பான்போல விதந்தோதிப் பயந்ததென்னையெனவும் கூறி மறுக்க.

இனி ஒருரை :

[6] "தாஉமணி கெழூஉமணி."

---

1. ஒரோர்கால்—ஒரோரிடத்து, வேண்டியபோது.

2. அவை—காசு, பிறப்பு என்பன.

3. நாஉத்தலை என்பதில், உகரம் புணர்ச்சிபற்றி வந்தது. அளபெடை எழுத்து இயல்பாக வந்தது என்பது கருத்து.

4. இருவகை யுகரமு மியைந்துவரின் அவை நேர்புநிரைபு ஆகும். இயைந்து வருதல்—ஒரு சொன்னீர்மைப்பட்டு வரல். அளபெடை ஒரு சொன்னீர்மைப்பட வாராது பிரிந்துவரும். ஆதலூல் ஆகா என்க.

5. சீராதற்கு இழுக்கென்னை என்றது அவற்றுளடங்கி உரிச்சீராகுமன்றி இவையும் (அளபெடைச் சீரும்) வேறாகி எட்டென்று விதந்து கூறலாற் பயனில்லை என்றபடி.

6. தாஉமணி—நேர் நிரை நேர். கெழூஉமணி—நிரை நிரை நேர். இவை வெண்சீராம்.



என்பன அளபெடை அசைநிலையாகியும் ஆகாதும் வருதலின் அவண்சீர்க்கும் இருநிலைமை கோடற்கென்ப. அது, நீடுகொடி குளிறுபுலி என்பனவற்றிற்கும் [1] ஒக்குமாதலானும், அசைபுந் தாம் இசையொடு சேர்த்துங்கால் அங்ஙனம் அசையாகாமை யானும் அது பொருந்தாதென்பது. இங்ஙனஞ் சீர்நிலை யெய்தின அளபெடைகளெல்லாம் வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொது வாயினவும், செய்யுட்கே உரியவாகிச் செய்யுள் செய்யும் புலவராற் செய்துகொள்ளப்படுவனவுமென இருவகைய ; அவ்விரு திறத்தவும்,

"நீட்டம் வேண்டி னவ்வள புடைய." (தொ. எழு. ௬)

என்னும் இலக்கணத்துட்பட்டு அடங்கின.

இனி, அவற்றுள் வழக்குக்குஞ் செய்யுட்கும் பொது வாகியதனை இயற்கையளபெடையென்றும், செய்யுட்குப் புலவர் செய்துகொண்டதனைச் செயற்கையளபெடையென்றும், பெயரிட்டு வழங்கப்படும். [2] அவ்விரண்டனுள்ளும் என்று 'அளபெடை யசைநிலை யாகலு முரித்து' எனப்பட்டது இயற்கை யளபெடையென்று பெயரிட்டு [3] வழங்கப்படும். செயற்கையளபெடை சீர்நிலையாதல் செய்யுட்கே யுரியவாறுபோல இயற்கை யளபெடை அசைநிலையாகலுஞ் செய்யுட்கே யுரியதென்பது.

ஆகலுமுரித்து என்ற உம்மையான் [4] அவையிரண்டானும் அவ்வாற்றானும் அசைநிலையாகப் படாது புணர்ச்சிவகையான் வந்த அளபெடைக்கண்ணும் பொருள் புலப்பாட்டிற்கு உரிய வாகச் செய்யுள் செய்யுமிடத்தும் அவ்வாறு அசைநிலையாகப் படுமென்றவாறு.

---

1. ஒக்குமென்றது நீடுகொடியையும் குளிறுபுலியையும். இங்ஙனமே முறையே நேர் நிரை நேர், நிரை நிரை நேர் என்று கொள்ளலாம் என்றபடி. இசையோடு சேர்த்துங்கால் தாஉமணி என்பதன் மகரம் பிரிந்து உகரத்தோடு சேராது என்றபடி.

2. அவ்விரண்டு — இயற்கையளபெடை, செயற்கையளபெடை.

3. வழங்கப்படும் என்பது வழங்கப்படுவது என்றுதல், வழங்கப்படுமளபெடை என்றுதல் இருத்தல்வேண்டும்.

4. அவையிரண்டு—இயற்கை, செயற்கை. அவ்வாற்றான் என்றது, வழக்கிற்குஞ் செய்யுட்குமுரியவாற்றான் என்றபடி. அவ்வாற்றானும் எனவும் பாடம். ஆகலும் உரித்து என்பது தொடர்ந்துள்ள வாக்கியத்தில் யாதோ பிழையுளது.

உதாரணம்:—

¹ "பலாஅக்கோட்டுத் திங்கணிமேற் பாய்ந்த கடுவன்."

எனப் பலாஅக்கோடென்புழி,

"குறியதன் முன்னரு மோரெழுத்து மொழிக்கு
மறியத் தோன்று மகரக் கிளவி." (தொ. எழு. உஉசு)

எனப்பெற்ற அகரமுண்டன்றே? அதுவும் அளபெடையெனப் படும்; அதனைப் பலாஅ என்புழிப் புளிமாவென்னுஞ் சீராக அலகுவையாது நிரையசை நிலைமைத்தேயாக வைக்கப்படு மென்பது.

"நிலம்பாஅய்ப்பாஅய்ப் பட்டன்று நோமென் னெஞ்சே
கலம்போதுப்போதுக் கௌவை தரும்."
(யா. வி. ப. சுரு—டி.சா—மேற்கோள்)

என்புழி, ² போதுப்போதுமெனச் ³ செய்மைக் குறிப்புப்படச் செய்யுள் செய்தவழியும் அளபெடை அசைநிலையாயிற்று. இனி, ⁴ இவற்றை விளியும் பண்டமாற்றும் ⁵ நாவல்கூற்றும் முதலாயவற்றுள் வருமென்பாருமுளர். அங்ஙனம் வந்தது பிற்காலத் துச் செய்யுளென்ப; அல்லதூஉம் அங்ஙனம் வரையறைப் படாமையானும் நாம் ⁶ முன்னர்க் காட்டினவை ஆண்டு அவற் றுள் அடங்காமையானும் அவ்வாறாம் ⁷ இகந்து கூறுமென் பதூஉம் படும்.

"உப்போஒ வெனவுரைத்து மீள்வா ளொளிமுறுவல்."
(யா. வி. ப. எஉ)

---

1. பலாஅக்கோடு—புணர்ச்சிவகையான் வந்தது.

2. போதுப் போதும் என்பது ஆரப்பொருளைக் காட்ட வந்தது என்பது கருத்து.

3. செய்மைக் குறிப்பு என்பது ஏட்டிற் கண்ட பாடம். ஒரு தொழில் பலகால் நிகழுஞ் சொல்லைக் குறித்து வந்ததென்று படி. 'சேய்மைக் குறிப்பு' என்ற பாடத்திலும் இது சிறப் பாகத் தோன்றுகின்றது.

4. இவற்றை என்றது அளபெடையை.

5. நாவல் கூற்றை—'நாவலோஒ என்றுரைக்கு நாவோதை' என்பதனுமறிக.

6. முன் காட்டினவை — முன் காட்டிய உதாரணங்கள். அவற்றுள்—விளிமுதலியவற்றுள்.

7. இகந்து—கட்டுக்கு—விதியுளடங்காமல்.



வைப் பண்டமாற்றின்கண் வந்தனெனக் காட்டுப, பிறவும் இவ்வாறு வருவன அறிந்து அசைநிலைப்பாற்படுக்க. என்றூர்க்கு, ¹ இவை செய்யுளுள் அம்போதை நிறையாவாயின் ² அலகிருக்கை யுள் அழித்துப் பயந்தனவன்றோவெனின்,—அஃதன்றே இதனை ³ எழுத்துநிலைப்படுமென்றற்குக் காரணமென்பது. அஃதேல், செய்யுளின் ஓசையை அழிக்கவமையும் பிறவெனின், — அற் றன்று; அவ்வோசையைச் செய்யுட்கண்ணே அழிப்பது ⁴ சந்தி இலக்கணத்தின் வழி இயிற்றும். இனிப் ⁵ பிறவற்றுக்கண்ணும் அளபெடையைச் சிதைத்துச் சொல்லின் அச்செய்யுளுட் கரு திய பொருண்மை விளங்காதாம், அது நோக்கிச் செய்யுளின் கண்ணதைச் சிதையாது சண்டு நாம் வேண்டப்பட்ட அலகிருக் கைக்கட் சிதைத்துக்கொள்கவென்றுமென்பது. (கஎ)

ஒற்றளபெடையும் சீர்நிலையாதலன்றி அசைநிலையுமாமெனல்]

டுo. **ஒற்றள பெடுப்பினு மற்றென மொழிப.**

இஃது ஒற்றளபெடையும் உயிரளபெடைபோலச் சீர்நிலை யெய்தலேயன்றி அசைநிலையாகலும் உரித்தெனமாட்டெறிந்தமை யின் எய்தாதது எய்துவித்தது. இதனை அசைப்படுத்து எழுத்து நிலையும் வேண்டுமென்னின்றமையின் வழுவமைத்ததூஉமாம்.

---

1. இவை—அளபெடை.

2. அலகிருக்கை—எண்ணிருப்பு.

3. எழுத்து நிலைமைப்பாடல் — அளபெடை எழுத்தென்று எழுத்து நிலைமையை அடைதல். அங்ஙனங் கொள்வதற்கு ஏனை எழுத்துக்கள்போல அளபெடை எழுத்தென்று கோட லாம் என்றபடி. அசைநிலையாதலும் என்றதனானே இதுவும் எழுத்தாகக் கொள்ளப்பட்டது. என்னை? அசை எழுத்தான் இருத்துக் கோடலின். அதுபற்றி எழுத்து நிலையும் வேண்டி னன் என்றார்.

4. சந்திஇலக்கணத்தின் வழிஇற்று என்றது பலாஅக்கோடு என்பதுபோலப் புணர்ச்சிபெறும் இலக்கணத்தினின்றும் வழுவு தல். என்றது புணர்ச்சிபெறுவது இருமொழி தம்முள் இயைந்து இசைபெற்று நிற்றற்கே. ஆதலின் அது வழுப்படும் என்றபடி. சந்தி—புணர்ச்சி.

5. பிறவற்றுக்கண் என்றது பொருள் புலப்பட அளபெடுக்கும் அளபெடை முதலியவற்றை; அவை போதுப் போதும் என்பன போல்வன.

துண்ணென்றது, திண்ணென்றது என வரும். பிறவுமன்ன. இவை, செய்யுளாகத்தன்றி [1] பரவை வழக்கினுள் வாராவென் பாருமுளர்; அவர் அறியார்; செய்யுட்குப் புலவர் செய்துகொண்ட அளபெடை பின்னர் அசைநிலையாதற்கு என்னை காரணமென மறுக்க. மற்று,

"அளபெடை யசைநிலை யாகலு முரித்தே." (ந. உக)

என வரையாது கூறவே இச்சூத்திரமும் அடங்குமாகலின் இது மிகையாம் பிறவெனின்,—அற்றன்று; [2] எழுத்தோத்தி னுள் ஒற்றளபெடுக்குமென்பது கூறுமையின் வேறு கூறினான்; அல்லதூஉம், உயிரளபெடையின் வேறுபட்டதோர் இலக்கண முடைமையின் இதனை வேறு கூறினானென்பது; என்னை? பணுஅட்டு என்றவழி உயிரளபெடை, கடிபாஅ என்னுஞ் சீராயவாறுபோலாகாது கொங்ங்கு குரங்ங்கு எஃஃகு பின்னும் என அளபெழுந்த [3] இருவகை யுகரவீற்றுச் சொற்கள், போரேறு கடிபாஅ என்னுஞ் சீராயும், ஞாயிறு வலியது என்னுஞ் சீராயுமாகாது இருவகை யுகரமொடு இயைபின்றி வருதலானும் அவை வண்டு வாகு என்னும் உரியசைச்சீர்ப் பாற்பட்டு அசை நிலையாகுமாதலானும், இருவகையுகரமோ டியைபாதவழிக்,

"உன்ன டண்ணெனக் கண்டுங் கேட்டும்."
(மலைபடு. கூருஉ)

எனவும்,

"கஃஃ றென்னுங் கல்லதர்."

எனவும் சீர்நிலை பெறுதலானுமென்பது. எனவே, இயற்கை யுயிரளபெடைபோலச் செயற்கையொற்றளபெடையும் ஒரோ வழி [4] ஓசையுட் சிதைக்கப்படாதாயிற்று. இதனானே உயிரள பெடைபோல ஒற்றளபெடை [5] வருகின்ற எழுத்தோடு கூடி

1. பரவை—உலகம்.

2. எழுத்தோத்து—எழுத்ததிகாரம்.

3. இருவகையுகரம்—குற்றியலுகரம், முற்றியலுகரம்.

4. ஓசை சிதைக்கப்படாதாயிற்று எனவே எழுத்து அலகு பெறுதென்பதாம். ஓசையுள் எனவும் பாடம்.

5. உயிரளபெடைபோல வருகின்ற எழுத்தோடு கூடி நிரையசையாய் வாராது என்றது—கொங்ங்கு என்புழி பின் வருங் குற்றுகரத்தோடு கூடி நிரையசையாய் வாராமையை. படாஅகை என்பதில், வருமெழுத்தோடு சேர்ந்து உயிரள பெடைஅகரம் நிரையாய்நிற்பதுபோல, இது நில்லாதென்றபடி.



யாகாதென்பதாம். ஈர்க்கு பீர்க்கு என [1] ஈரொற்று நின்ற வேறோரசையாகாதவாறுபோல ஒற்றளபெடையும் ஒரோ அசைநிலை பெறுதென்பதூஉம் கூறினாம்.

இனி, இயற்கையொற் றளபெடை சிறுபான்மை வருமாத [2] இஃது அசைநிலையாதலே பெரும்பான்மையாதனோக்கி டெடுத்தான் எனவும் அமையுமெனக் கொள்க. (கூஅ)

[ வெண்பா வுரிச்சீர் இதுவெனல் ]

**இயற்சீ ரிறுதிமு னேரவ ணிற்பி**
**னுரிச்சீர் வெண்பா வாகு மென்ப.**

இது, நிறுத்தமுறையானே ஈரசைகொண்டு சீரியைந்தது உணர்த்தி இனி மூவசைகொண்டு முடிவன உணர்த்துவா னெடுத்தான் அவற்றுள் இது வெண்பாவுரிச்சீ ருணர்த்து து.

இ—ள்: மேனின்ற அதிகாரத்து இயலசையானாகிய இயற்சீ ரிறுதிக்கண் நேரசை பெறுவன நான்கும் வெண்பாவுரிச்சீரா மெனச் சொல்லுவர் புலவர் என்றவாறு.

உரிச்சீர் வெண்பா வெண்பாவுரிச்சீராகுமெனப் பொழிமாற்றி

உதாரணம்:— நேர்நேர்நேர், நிரைநேர்நேர், நேர்நிரை நேர், நிரைநிரைநேர் என வரும். இவற்றை மாசெல்வாய், புலி செல்வாய், மாவருவாய், புலிவருவாய் எனவும், தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கருவிளங்காய் எனவும் வேறு உதாரணங் காட்டுப. பிறவும் அவ்வாறு வருவன அறிந்து கொள்க.

1. ஈர்க்கு பீர்க்கு என்பவற்றில் ஒற்றிரண்டுங் கூடி வேறோ ரசையாகாதவாறுபோல கொங்ங்கு குரங்ங்கு என்னும் ஒற் றளபெடையும் ஒரோவழி வேறோர் அசையாகாது என்பதாம். நிலைபெறுது என்பது வேறோரசையாகாது என்றிருத் தல் வேண்டும். பெறும் என்றுமிருக்கலாம்.

2. இஃது அசைநிலையாதல் என்பது இஃது சீர்நிலையாதல் என்றிருக்கவேண்டும். 'தானும் தன்னோடியைந்த எழுத்துஞ் சீர்நிலையாதலே பெரும்பான்மை' என்று இச் சூத்திர உரையுள் முன்னும் வரல் நோக்குக. இஃது—ஒற்றளபெடை.

றாக நாற்பாலுறழ அறுபத்துநான்கு மூவசைச்சீர் பிறக்கும். அவற்றுள், இயலசைமருங்கின் [1] நேரிறுவன நான்கு சீருள; அவை முன்னர் (௩௩௪) வெண்சீர் நான்கெனக் கூறப்பட்டன. ஒழிந்த மூவசைச் சீர்களெல்லாம் வஞ்சியுரிச்சீரெனப்படும் என்றவாறு. அவை அறுபதுவகைப்படும்.

உதாரணம் : நேர் நேர் நேர், நேர் நிரை நேர், நேர் நேர்பு நேர், நேர் நிரைபு நேர் எனவும்; நிரை நேர் நேர், நிரை நிரை நேர், நிரை நேர்பு நேர், நிரை நிரைபு நேர் எனவும்; நேர்பு நேர் நேர், நேர்பு நிரை நேர், நேர்பு நேர்பு நேர், நேர்பு நிரைபு நேர் எனவும்; நிரைபு நேர் நேர், நிரைபு நிரை நேர், நிரைபு நேர்பு நேர், நிரைபு நிரைபு நேர் எனவும்; இவை நேரீற்று மூவசைச்சீர் பதினாறு. இவற்றுள் வெண்சீரென மேற்காட்டிய நான்குமொழித்து ஒழிந்த பன்னிரண்டும் வஞ்சியுரிச்சீர். இனி நிரையீற்று மூவசைச்சீர் பதினாறும் வருமாறு :— நேர் நேர் நிரை, நேர் நிரை நிரை, நேர் நேர்பு நிரை, நேர் நிரைபு நிரை எனவும்; நிரை நேர் நிரை, நிரை நிரை நிரை, நிரை நேர்பு நிரை, நிரை நிரைபு நிரை எனவும்; நேர்பு நேர் நிரை, நேர்பு நிரை நிரை, நேர்பு நேர்பு நிரை, நேர்பு நிரைபு நிரை எனவும்; நிரைபு நேர் நிரை, நிரைபு நிரை நிரை, நிரைபு நேர்பு நிரை, நிரைபு நிரைபு நிரை எனவும்; நிரையீற்றுச்சீர் பதினாறும் வந்தன. நேர் நேர் நேர்பு, நேர் நிரை நேர்பு, நேர் நேர்பு நேர்பு, நேர் நிரைபு நேர்பு எனவும்; நிரை நேர் நேர்பு, நிரை நிரை நேர்பு, நிரை நேர்பு நேர்பு, நிரை நிரைபு நேர்பு எனவும்; நேர்பு நேர் நேர்பு, நேர்பு நிரை நேர்பு, நேர்பு நேர்பு நேர்பு நேர்பு, நேர்பு நிரைபு நேர்பு எனவும்; நிரைபு நேர் நேர்பு, நிரைபு நிரை நேர்பு, நிரைபு நேர்பு நேர்பு, நிரைபு நிரைபு நேர்பு எனவும்; இவை நேர்பீற்றுச்சீர் பதினாறும் வந்தன. நேர் நேர் நிரைபு, நேர் நிரை நிரைபு, நேர் நேர்பு நிரைபு, நேர் நிரைபு நிரைபு எனவும்; நிரை நேர் நிரைபு, நிரை நிரை நிரைபு, நிரை நேர்பு நிரைபு, நிரை நிரைபு நிரைபு எனவும்; நேர்பு நேர் நிரைபு, நேர்பு நிரை நிரைபு, நேர்பு நேர்பு நிரைபு, நேர்பு நிரைபு நிரைபு எனவும்; நிரைபு நேர் நிரைபு, நிரைபு நிரை நிரைபு, நிரைபு நேர்பு நிரைபு, நிரைபு நிரைபு நிரைபு எனவும் இவை நிரைபீற்றுச்சீர் பதினாறும் வந்தன. நேரீற்று வஞ்சியுரிச்சீர் பன்னிரண்டும் நிரையீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறும் நேர்பீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறும் நிரைபீற்று வஞ்சியுரிச்சீர் பதினாறுமாக வஞ்சியுரிச்சீர் அறுபதும் வந்தன. அவற்றுக்குச் செய்யுள் :—

[1] "மேற்கோட்டுநீர் கீழ்ப்பரந்துதன்
விழுக்கோட்டுமெய் வியல்விசும்புதோய்க்
கோங்குமுன்னர்க் காம்புகழியப்
பாய்ந்துசென்றுசென் றோங்குநவிபுநின்
றெதிர்த்துமீண்டாங் கதிர்த்துக்கரைகொன்
றலங்குகோட்டுறுத் திலங்குநிலவுச்செய்
தார்நிரைக்காவிரி பரக்குந்தண்டலை
மூதூர்சேர்வன பேரிசைவளவன்
சுரம்படர்ந்து வருந்துவதெவனோ
நிரம்பாவாழ்க்கைப் பாணர்க்குப்பே."

சீரோடும் பின்னின்ற நேர் நிரை நேர்பு நிரைபு முதலிய நான்கையும் தனித்தனி கூட்ட $4 \times 16 = 64$ ஆகும் என்றபடி. அறுபத்துநான்கும் பின் கூறப்படுமாறு காண்க. இறுதி நின்ற நால் அசையோடும் உறழ் என்க.

1. நேரிறு நான்காவன :—

நேர் நேர் நேர்
நேர் நிரை நேர் } இவை நான்கும் வெண்சீர்.
நிரை நேர் நேர் } இவை வஞ்சிக்கு வாரா.
நிரை நிரை நேர்

ஒழிந்த அறுபதும் வஞ்சிச்சீர் எனப்படும். அவை பின் வருகின்றன.



நேரீறு பன்னிரண்டாவன :—

1. மேற்கோட்டுநீர்—நேர் நேர்பு நேர் 1 } நேர் முதல் நேரீறு 2
கீழ்ப்பரந்துதன்—நேர் நிரைபு நேர் 2

விழுக்கோட்டுமெய்—நிரை நேர்பு நேர் 1 } நிரைமுதல் நேரீறு 2—4
வியல்விசும்புதோய் —நிரை நிரைபு நேர் 2

ஓங்குமுன்னர்—நேர்பு நேர் நேர்
காம்புகழிய—நேர்பு நிரை நேர் } நேர்பு முதல் நேரீறு 4
பாய்ந்துசென்றுசென்—நேர்பு நேர்பு நேர்
ஓங்குநவிபுநின்—நேர்பு நிரைபு நேர்

எதிர்த்துமீண்டாங்—நிரைபு நேர் நேர்
கதிர்த்துக்கரைகொன்—நிரைபு நிரை நேர் } நிரைபு முதல் நேரீறு 4
அலங்குகோட்டுறுத்—நிரைபு நேர்பு நேர்
இலங்குநிலவுச்செய்—நிரைபு நிரைபு நேர்

இவை 12-ம் நேரீற்று வஞ்சியுரிச்சீர்.

களிறுகால்கிளர்ந்து குளிறுகுரல்படைத்துச்
சொரிந்துதூங்குகாத்து விரைந்துமலைந்துதொலைந்து
மலைக்கவழாரமொழுகு நயக்கச்சூடிய
வெண்வேற்சென்னி வென்வியர்ப்புனைநரன்
பாடுபெறு பாணிதூம்பலவே
பாடநாடிய நாடுகொழீஇவந்தே."

இதனுள், நிரைபிற்று வஞ்சியுரிச்சீர் பதினாறும் முறையானே வந்தன. (உ௦)

[வஞ்சிச்சீர் ஏனைப்பாவுள் பெரும்பாலும் வாராவெனல்]

௩௩௩. தன்பா வல்வழித் தானடை வின்றே.

இஃது, அவற்றைப் பாவிற்குரிமை கூறுகின்றது.

இ—ள்: இவ்வாறுபத்து வஞ்சியுரிச்சீரும், தன்பாவினுளல்லாத ஆசிரியம் வெண்பாக் கலியினுள் வாரா என்றவாறு.

சிறுபான்மையான் ஆவன முன்னர்ச் சொல்லுதும். [1] இவை ஆசிரியவுரிச்சீர் தூங்கலோசையாக்குமாறுபோல, ஆசிரிய வோசையும் ஆக்குங்கொல்லெனின்,—ஆக்காவென்பது இதனது பயன். (உக)

[ஆசிரிய உரிச்சீரும் வெண்பா உரிச்சீரும் வஞ்சிப்பாவையாக்குமெனல்]

௩௩௪. [2] வஞ்சி மருங்கி [3] னெஞ்சிய வுரிய.

இது, மற்றைச்சீர் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: வஞ்சியுரிச்சீர் பிற பாக்களை ஆக்காதவாறு போலாது ஒழிந்த ஆசிரியவுரிச்சீரும் வெண்பாவுரிச்சீரும் இவ் வஞ்சிப்பாவினையாக்கும் என்றவாறு.

உரிச்சீர் மேலதிகாரமாகலான் எஞ்சிய என இவ்விரண்டனையுமே கொண்டாமென்பது. வஞ்சியது பாவினை வஞ்சி என்றான் ஆகுபெயரான். மற்றுச் சீர் கூறும்வழிப் பாக் கூறுவ தென்னையெனின்,—அப்பாவினை யாக்குவன சீராகலின் [1] சீரிலக்கணம் எய்துமென்பது. அவையாமாறு:

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்
தற்பாடிய தளியுணவின்." (பட்டின. க-௩)

எனத் [2] தன்சீர் வரத் தூங்கலோசை பிறந்தது.

"தாழ்நாறமழுந் தண்டண்டலை." (பொருந. கஅக)

எனபதூஉம்,

"புட்டேம்பப் புயன்மாறி." (பட்டின. ௪)

என்பதூஉம் வெண்பாவுரிச்சீரால் தூங்கலோசை பிறந்தது.

"புட்டேம்பப் புயன்மாறி."

என்புழி,

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்."

எனத் தனதுசீரானே தூங்கலோசை பிறக்குமாங்குப் பிறந்தது.

[3] "திசைதிரிந்து தெற்கேகினும்."

என, இயற்சீர் நிற்பத் தன்சீரானே தூங்கலோசை பிறந்தது.

[4] "புள்ளொருந் துயின்று புலம்புகூர்ந்து."

என, ஆசிரியவுரிச்சீரான் வஞ்சித்தூக்காயிற்று. பிறவும் அன்ன. (உஉ)

[கட்டளையடிக்கண் ஆசிரியப்பாவுள் வாராத சீர்கள் இவையெனல்]

௩௩௫. வெண்பா வுரிச்சீ ராசிரிய வுரிச்சீர்
இன்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே.

இது, கட்டளையாசிரியப்பாவினுள் அடிபுகுப்படாத சீர் இவையென்கின்றது.

---

களிறுகால்கிளர்ந்து—நிரைபு நேர் நிரைபு } நிரைபு
குளிறுகுரல்படைத்து—நிரைபு நிரை நிரைபு } முதல்
சொரிந்துதூங்குகாத்து—நிரைபு நேர்பு நிரைபு } நிரை
விரைந்துமலைந்துதொலைந்து—நிரைபு நிரைபு நிரைபு } பீறு 4

இவை அறுபதும் வஞ்சியுரிச்சீர்.

1. இவை ஆக்குங்கொல் எனின்? ஆக்கா என இயைக்க. இவ்வஞ்சிக்குரிய அறுபது சீரும் ஆசிரிய முதலிய ஏனைப் பாக்களில் வாரா என்றபடி.

2. வஞ்சி—வஞ்சிப்பா.

3. எஞ்சிய—வஞ்சி ஒழிந்த வெண்பாவும் ஆசிரியமும்.

1. சீரிலக்கணம் எய்தும் என்றது—சீரிலக்கணத்தைப் பாவும் எய்துமென்றபடி.

2. தன்சீர் என்றது—வஞ்சிச்சீரை.

3. திசைதிரிந்து—நிரைநிரைபு. உரியசை மயங்கிய இயற்சீர். இது நின்றசீர். தெற்கேகினும்—வஞ்சிச்சீர். இது வந்தசீர். இது வரவிற்றூங்கலோசை பிறந்ததென்றபடி.

4. புள்ளொருந் துயின்று—, நேர்பு நிரைபு,— (ஒற்றொருங் தோன்றி நின்றது) புலம்புகூர்ந்து—நிரைபு நேர்பு. } ஆசிரிய உரிச்சீர்.

ஆண்டு [1] விலக்குண்ணுமாகலி னென்பது. [2] அவற்றுக்குச் செய்யுள் :

[3] 'ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந் தருவிசெருக்கு நறுமலர்வேங்கை'

எனவும்,

[4] 'விளங்குமணிப் பசும்பொன்னின் விராலவதிமேல் விளையாடி'

எனவும் நிரையீற்றாசிரியவுரிச்சீர் கலிப்பாவினுள் வந்தன.

'வஞ்சியேன் என்றவன் றன் னூருரைத்தான் யானவனை'

எனவும்,

'அரிதாய வறனெய்தி அருளியோர்க் களித்தலும்'

எனவும் [5] இவைபிறவாறும் வெண்பாவினைத் தொடுக்கப்படுதலின் வெண்சீர் என்னுஞ் சொல்லின் முடிபிலக்கணத்தான் [6] விதந் தோதாரேனும் [7] அவ்விரு பாவிற்கு முரியவாயின. மற்றுக் கலி மருங்கினென்றது தளைமருங்கி னென்றற்கன்றேயெனின்? இவ் வாராய்ச்சியுடையன கட்டளையடியென்றற்கென்பது. எனவே, தளை யென்றோதுவனவெல்லாம் கட்டளையடியையே நோக்குமென்பது பெற்றாம். இன்னணம் வரையறையுடையன கட்டளையடியெனவே [8] அல்லாத அடிக்கண் [9] ஒழிந்த ஆசிரியவுரிச்சீரும் வருமென் பது பெறுதுமென்பது. மற்றுங் கட்டளையடியல்லாத வாசிரிய அடியுள் உரியசை மயங்கிய ஆசிரியவுரிச்சீரும் வருமென்பதூஉங் கூறுகவெனின், அவை விலக்குண்டது கட்டளையடிக்காதலின் விலக்காதவழித் தன்சீர் வருதல் விதந்தோதல் வேண்டாவென் பது முற்கூறியவாறே கொள்க. (உச)

1. விலக்குண்ணுமாகலின் ஓதுவான் (ஓதுபவன்) கூறல் வேண்டுமென்றே என இயைக்க.
2. அவற்றுக்கு — நிரையீற்றுரிச்சொல் வருவனவற்றிற்கு.
3. ஓங்குவரை—நேர்புநிரை—[illegible].
4. விளங்குமணி—நிரைபுநிரை—குளிறுபுலி.
5. இவை—இவ்வடிகள். வெண்சீர் என்ற சொல்லானே வெண்பாவுக்குரிய சீர் என அதனிலக்கணமுறாம் முடிக்கப்படும். எனவே வெண்சீர் ஒன்றுதல் வருமிடத்து கலிப்பாதலின் அதற்கும் அவ் விலக்கண மமையும்; விதந்து கூறல்வேண்டாம் என்றபடி. இங் ஙனே சூத்திரவுரையுள் இவ்வுரையாசிரியர் முன்னுங் கூறல் காண்க.
6. விதந்தோதல்—சூத்திரத்தான் விதந்து கூறல்.
7. அவ்விருபா—வெண்பா, கலிப்பா.
8. அல்லாத—கட்டளையடியல்லாத.
9. ஒழிந்த—நேர்புநிரையும், நிரைபுநிரையும் அல்லாத ஆசிரியவுரிச்சீர்.



[நேரீற்றியற்சீர் கலிப்பாவின்கண் கட்டளையடியுள் வாராவெனல்]

௬௩. கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே.

இதுவுங் கட்டளையடிக்கண்வரற்பாலதோர் சீர் வரையறை.

இ—ள்: கலித்தளையடிவயின் — கலிப்பாவினது கட்டளை யடிக்கண், நேரீற்றியற்சீர் நிலைக்கு உரித்தன்று—தேமா புளிமா என்னுமீரியற்சீரும் வரப்பெறா, தெரியுமோர்க்கே—அவ்வ ோசையைத் தெரிந்தார்க்கு என்றவாறு.

ஆகாவென்றதனைக் காட்டாவதில்லை, ஆகாவென்பதல் லது. கட்டளையடிக்கண் வரைந்தோதலின் அல்லனவற்றுக்கண் வருமென்பதாம். அவை:—

'பாஅ லஞ்செவிப் பணைத்தாள் மானிரை'

எனவும்,

'உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையை'

எனவும்,

'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்'

எனவும் கலியடியுள் வந்தன. [1] இயற்சீர் பத்தனுள்ளும் இவை யிரண்டனையும் கலிக்கண் வாராவெனவே, ஒழிந்த ஆசிரியத் தன்னும் வெண்பாவுள்ளும் பயின்றவியற்சீரும் [2] வேறுவேறு வந்து அடியுறழுமென்பதூஉம், இதற்காயின் [3] எட்டியற்சீர் அடியுறழு மென்பதூஉம் கூறினானாம். எனவே ஆசிரியம் இயற்சீர் பத் தும் ஆசிரியவுரிச்சீர் இரண்டுமெனப் பன்னிரண்டுசீர் பெறுவ தாயிற்று. வெண்பாவும் இயற்சீர் பத்தும் வெண்சீர் நான்கு மெனப் பதினான்குசீர் பெறுவதாயிற்று. கலிப்பா [4] அடியின் இயற் சீரெட்டும், வெண்சீர் நான்கும், ஆசிரியவுரிச்சீ ரிரண்டுமெனப் பதினான்குசீர் பெறுவதாயிற்று.

1. இயற்சீர் பத்தாவன:— தேமா, புளிமா, கணவிரி, பாதிரி, (326) சேற்றுக்கால், களிற்றுத்தாள், (327) போரேறு, பூமருது, காடுபாறு, மழகளிறு. (328) ஆசிரியவுரிச்சீரிரண்டு— நீடுகொடி, குளிறுபுலி. இவைகள் வெண்பாவுக்குமுரியன.
2. வேறுவேறு வந்து—தனித்தனி வந்து.
3. கலிக்குரியன தேமா புளிமா ஒழிந்த இயற்சீரெட்டும்.
4. அடியின் என்பது வேண்டியதில்லை.

இனி, வஞ்சிப்பாவிற்கும் 'வஞ்சி மருங்கி னெஞ்சிய வுரிய' என முற்கூறியவாற்றான் [1] ஈரசைச்சீர் பதினாறும் மூவசைச்சீர் அறுபத்துநான்குமென என்பது சீருங் கட்டளையடியல்வழி உரியவென எய்துவித்தாம். அவற்றுள் தேமா புளிமா என்னு மிரண்டுசீரும் ஆகாத இடம் இனிச் சொல்லுகின்றான். (௨௫)

[நேரீற்றியற்சீர் வஞ்சிப்பாவினும் அடிமுதற்கண் தூங்கலோசைப்பட்டு நில்லா எனல்]

௩௩௮. **வஞ்சி மருங்கினு மிறுதி நில்லா.**

இது வஞ்சிப்பாவினுள் வாரா இயற்சீர் கூறுகின்றது.

இ—ள்: வஞ்சி மருங்கினும் — மேற்கூறிய இயற்சீரிரண்டும் வஞ்சிப்பாவினும், இறுதி நில்லா — [2] ஈற்றில் நிலைமைப்படா என்றவாறு.

வஞ்சியல்லா மருங்கினொன்றோ வஞ்சி மருங்கின்னென வாளாது கூறினான் அது கட்டளையடிக்கல்லதன்மையின். வஞ்சிப்பாவினுட் சீர் வருங்கால் ஒழிந்த பாவிற்குப்போலச் சீர்வகையடியுள் மாத்திரையன்றிச் சீரோடாம் தம்முள் வேறுபாடு தோன்றத் தூங்கப்படும். அவ்வாறு தூங்கலோசைப்பட நில்லா தேமா புளிமாவென்னும் இரண்டு சீருமென்றவாறாம். உம்மை இறந்தது தழீஇயிற்று. இறுதி நில்லாவென்பது இறுதலோடு நில்லா என்றவாறு. எனவே, தூங்கலோசைப்பட முதற்கண் வாராவென்றவாறும். என்னை? இருசீரினான் வருஞ் சீரோடு தொடருங்கால் இறுதற்கொழில் பெறுவது நின்ற சீராகலினென்பது. இதனானே ஒழிந்த இயற்சீர் தூங்கலோசைப்பட நிற்குமென்றவாறும்.

"கொற்றக் கொடியுயரிய"

எனவும்,

"களிறும் கதவெறிந்தன"

எனவும் நேரீற்றியற்சீர் முதற்கண் தூங்காவாயின.

"அகல்வயல் மலைவேலி நிலவுமணல் வியன்கானல்"

என ஒழிந்த இயற்சீர் தூங்கினவென்பது. இவையுங் கட்டளையல்லவென்பது "அசையுஞ் சீரும்" என்பதனான் அறிக. இறுதிக்கண் நில்லாமையின்,

"மண்டிணிந்த நிலனும் நிலனேந்திய விசும்பும்"

என நேரீற்றியற்சீர் வந்தன.

இனி, ஈற்றுக்கண் வருதல் சிறுபான்மையென்பாரும், யாண்டும் இறுதிக்கண் வாராவென்பாரும் இச்சூத்திரத்தை யுரைக்குமாறு; வஞ்சியடி இறுதிக்கண் இவை வாராவெனப் பெரும்பான்மைபற்றி யோதினான் எனவும் சொல்லுப. அவ்வாறு கூறின் முதற்கண் அவ்விருசீரும் வருதல் பெரும்பான்மையாதல் வேண்டுமென மறுக்க. என்றார்க்கும்,

"தண்பால் வெண்கவரி
ஞெளிவே விளங்குமடக்கை."

எனவும்,

"புன்காற் புனர்மருதின்
போதவிழ்ந்த புனற்றுறை,"

எனவும்,

"தேன்றூட் கரும்பின்"

எனவும் வந்தனவாலெனின், அங்ஙனம் கலிந்த காட்டுவனவை அளபெடையென்மினாம்; அது செய்கருவியாக உணர்க. என்னை?

"கொற்றக் கொடியுயரிய."

என அளபெடுத்தவழித் தூங்காமையின். அல்லாவுடம் நேரீற்றியற்சீர் [1] இறுதிக்கண் நிற்றல் பெரும்பான்மையெனப்படும்.

"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயுந்
தீமுரணிய நீருமென"

எனவும்,

---

1. ஈரசைச்சீர் பதினாறுமாவன:— இயற்சீர் 4. உரிச்சீர் 4. நேர்நிரையை முதலாகக் கொண்ட நேர்பு நிரைபு ஈறு 4. நேர்பு நிரைபை முதலாகக் கொண்ட நேர் நிரையீறு 4. ஆக 16.

2. ஈற்றில் என்பது பின் இறுதலோடு நில்லா என்று விளக்கலின் ஈண்டும் இறுதலில் நில்லா என்றேனும் இற்று நில்லா என்றேனும் இருத்தல்வேண்டும். ஆசிரியர் காலத்து இறுதியில் இவ்விரு சீரும் வந்தில என்பது சூத்திரத்தான் அறியக் கிடக்கின்றது.



1. இறுதி நில்லா என்பதற்கு இறுதலோடு நில்லா என்று பொருள் கோடற்குக் காரணம் கடைச்சங்க நூல்களை நோக்கியதாகலின் அது பொருந்தாது. இந்நூல் செய்த காலத்து இறுதியில் நில்லாதிருத்தல் வேண்டுமென்று கோடலே பொருத்தமாம். அங்ஙனமாயின் கடைச்சங்க நூல்களுக்கு இலக்கணம் இல்லாதொழியுமெனின். வாரா என்னாது நில்லா என்பதனாற் சிறுபான்மை வருமெனக் கொண்டனர்போலும்.

இடம் நியமித்ததென்னையெனின், சீர்வகையான் [1] அசைச்சீரென வேறாய் நிற்றலுடைய, தளைவகை சிதையாத் தன்மை நோக்கியே இயற்சீர்ப்பாற்படுத்து இயற்றுகவென அடங்கக் கூறிற்றென அறிவித்தற்கென வுணர்க.

இவ்வுரியசை யிரண்டுஞ் சீர்வகையான் வேறுவேறு எண்ணித் தொகைபெற்றுந் தமக்கு ஒவ்விய அடியுறழுமெனவும், [2] அஃதென்னப்பட்ட தளைவகை நோக்குங்கால் வேறுவேறெண்ணுந் தொகை [3] பெற்று இயற்சீரெனவே யடங்குமெனவுங் கூறப்பட்டதாம். இன்னுந் தளைவகைக்கண்ணெனவே, கட்டளையடிக்கண்ணதே இவ்வரையறை யென்பதூஉம், அல்லாதவழி [4] இந்நான்கசையும் வரையறையின்மையிற் தளைகொள்ளப்படா தென்பதூஉங் கூறப்பட்டதாம். அஃது [5] ஓரசைச்சீரல்லாத சீராயிற் கட்டளையடியல்வழியுந் தளைகொள்படுமோவெனிற், தளைகொள்ளிற் கட்டளையடியெனப்படுமாதலின் அல்லாதவழி வந்த சீர் தளைகொண்டனவென்றல் பயனில் கூற்றெனமறுக்க.

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு." (முருகு- க)

என்றவழி, ஆசிரியத்தளைத் தொடர்ந்து வந்ததென்று இலக்கணங் கூறி வழுவமைக்கல்வேண்டா. என்னை? அது பொருளாகின்றாகலின். இதனான் வருஞ் [6] சீர்வகையான் வந்ததென்று ஒழிகவே

1. நேர்பு நிரைபு இரண்டும் பெயரான் அசைச்சீரெனப் படும். தளையால் இயற்சீராக வைத்துத் தளை கொள்ளப்படும் என்றபடி. எனவே இயற்சீருள் அடங்குவதன்றி இயற்சீரெனப் படா என்றபடி.

2. அசைச்சீரிரண்டும் அடியுறழுமிடத்து வண்ணத்தொகை பெற்றும் இயற்சீருள் அடங்கும் என்றபடி. நோக்குங்கால் அடங்கும் என இயைக்க.

3. பெற்று—பெற்றும் என்றிருத்தல்வேண்டும். பெறுது எனினுமாம். இதற்குத் தளைக்கண் எண்ணுத்தொகை பெறு தென்க.

4. நான்கசை என்றது நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கையும்.

5. ஓரசைச்சீரல்லாத சீர் என்றது ஈரசையாய் 'வலனேர்பு' என்பதுபோல் வேறசையோடு வருவனவற்றை.

6. சீர்வகையான் என்றது கட்டளையடியல்லாத சீர்வகை யடியான் என்றபடி. "வலனேர்பு" சீர்வகையான் வந்ததாகலின் வழுவமைக்கவேண்டா; சீர்வகையடியென்று ஒழியவே அமையும் என்றபடி.



மையும்; வரையறையில்லனவற்றுக்கு வரையறை கூறல் குற்றமின் என்பது. மற்று இவ்வுரியசைச்சீரிரண்டும் வரையாது நிலைமையின் மூன்று பாவிற்குஞ் செல்லும் பிறவெனின்,

"கலித்தளை யடிவயி னேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்று." (337)

னக் கூறி ஈண்டு இவற்றை இயற்சீர்ப்பாற்படுமென்றமையின் வையுங் கலிப்பாவிற்கு விலக்குண்டனவென்பது. எனவே, ரியத்திற்கும் வெண்பாவிற்கும் உரியசைச் சீரிரண்டும் உரியயின. ஆசிரியத்திற்கு மேற்கூறிய பன்னிரண்டும் இவை ண்டுமென அடியுறழுஞ்சீர் பதினான்காயின. வெண்பாவிற்கு ன்சொல்லிய சீர் பதினான்கும் இவையிரண்டுமாக அடியுறஞ்சீர் பதினாறாயின. கலிப்பாவிற்கு மேற்கூறிய சீர் பதின்குமேயாயின. இங்ஙனம் வகுக்கப்பட்ட சீர் நாற்பத்துநான் னையும் சீர்வகையான் உண்மை நோக்கித் தொகுப்ப இயற்சீர் தும் ஆசிரியவுரிச்சீரிரண்டும் வெண்சீர் நான்கும் அசைச்சீ ண்டுமெனப் பதினெட்டாம்.

மேல் (கூகஉ) ஐவகை யடியெனப்பட்ட அறுநூற்றிருபத் தடியும் இச்சீர் பதினெட்டானுந் தோற்றிக்கொள்ளப்படும். பதினெட்டுச் சீரும் இருநிலைமை யெய்துவனவும் எய்தா வுமாகி முப்பத்தொன்றாகி விரியுமாறு முன்னர்,

"எழுத்தள வெஞ்சினும்" (355)

புழிச் சொல்லுதும். (உ௮)

[ப்பாவிற் கட்டளையடிக்கண் ஓரடியுள் இறுதியில் நிற்கும் வெண்சீரின் முதலசை நேராயினும் நிரையாகக் கொள்ளப்படும் எனல்]

௯. வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே.

இது வெண்சீராற் கலித்தளையாமா றுணர்த்துகின்றது.

"கலித்தளை மருங்கிற் கடியவும் படா." (334)

புழி, ஆசிரியவுரிச்சீராற் கலித்தளையாமென்றான். அவ் காரம் இடையறாது நின்றமையின் இதுவுங் கலித்தளைக்கே லக்கணமாயிற்று. என்றற்கு,

"வஞ்சி மருங்கினும்" (338)

எனவும்,

"இசைநிலை நிறைய" (339)

எனவும்,

"இயற்சீர்ப் பாற்படுத்து" (340)

எனவும் இம்மூன்று சூத்திரம் இடையிட்டனவாலெனின், அற்றன்று. கலிப்பாவிற்கு விலக்கப்பட்ட நேரீற்றியற்சீர் அதிகாரம் பற்றி இடை புகுந்தனவல்லது [1] கலித்தளை யதிகாரம் விலக்கின வல்லவென்பது.

இ—ள்: வெண்சீர் பல தொடர்ந்து ஒரு கலியடியுள் நின்ற வழி அவ் வெண்சீருள் ஈற்று நின்ற சீரின் முதல்வந்த நேரசை மற்ற நிரைமுதல் வெண்சீர் வந்து முன்னைய இரண்டுங் கலித்தளையாயவாறுபோலக் கலித்தளையாம் என்றவாறு.

மேனின்ற அதிகாரத்தாற் றளைவகை சிதையாத் தன்மைத்தென்பது கூட்டியுரைக்க. எனவே, வெண்சீர்ப் பின்னர் நிரை வந்து தட்டலே சிறந்ததெனவும், [2] நேர்வந்து தோன்றினும் அவ்வோசையே பயந்து ஒரு நிகர்த்ததென்பதூஉங் கூறினும் அவ்வாறுங்காலும் இறுதிச் சீரின் முதலசையே நிரையசையாவதெனவுங் கூறினானாம். [3] இது மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தலென்னும் உத்திவகை. [4] வெண்சீரிறுதியென்பது ஏழாவதன் தொகை; என்னை? ஈறெனப்பட்டது சீராகலின். வெண்சீருள் ஈற்றுச்சீரெனவே வெண்சீர் பலவுந் தொடர்ந்து நிரை முதல் வந்தவழியன்றி, இறுதிச்சீர் தோன்றியது நிரையசை யியற்றாதென்பதாம். இது

1. கலித்தளை மருங்கிற் கடியவும்படா என்று தொடங்கிய அதிகாரம் விலக்கப்பட்டது அன்று. ஏனெனின்? அடுத்துக் கலித்தளையில் நேரீற்றியற்சீர் வாரா என இயற்சீர்பற்றிய அதிகாரம் வந்தமையின் அவ்வதிகாரம்பற்றிய முடிபுகளை இடையின் மூன்று சூத்திரத்தாற் கூறி, மீளவுங் கலித்தளையதிகாரமே தொடங்கி இச் சூத்திரத்தால் அத்தளைக்கே விதி கூறுகின்றாராதலின்.

2. நேர்வந்து தோன்றினும் என்றிருந்திருத்தல்வேண்டும். பின் 'இறுதிச்சீர் தோன்றினும்' என வருதல் காண்க.

3. இறுதிச்சீரின் முதலசை என்பது 'மொழிந்த......மொழியாததனை முட்டின்றி முடித்தல்' என்னும் உத்திவகை.

4. வெண்சீர் இறுதி—வெண்சீருள் இறுதிச்சீர் என ஏழாவதன் தொகையாக விரிக்க என்றபடி.



தன் நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை தட்டுங்கால் [1] இயற்சீர் அடிமுதற்கண் வருமென்பதூஉங் கூறப்பட்டதாம். மற்று ஈறென்றது ஈற்றுச் சீரினையாயின் [2] அச்சீரினிடையும் இறுதியும் நின்ற அசையினை நிரையசை யியற்றென்று கொள்வலெனின், நின்றசீரின் ஈற்றசை வருஞ்சீரின் முதலசையோடு ஒட்டித்தளையாவதன்றி [3] ஒன்றிடையிட்ட அசையுஞ் சீரும்பற்றித் தளை கொள்வாரின்மையின் அது கடாவன்றென்பது. இனி [4] வெண்சீரென்பது அஃறிணை இயற்பெயராகலானும் [5] பன்மை வினைகொண்டு பால் அறிய வந்ததன்றாயினும் அதனை [6] யானைக் கோடென்றாற்போல, இறுதி யென்றமையானும் பன்மைப்பாற் பட உணர்க. என்னை? [7] பின்னோன் முன்னோன் என்றவழி அவற்கு முன்னும் பின்னும் வேறு சிலருளரென்பது உணர்த்து

1. இயற்சீர் என்றது ஞாயிறு, வலியது, பாதிரி, கணவிரி போல்வனவற்றை. நிரைமுதல் வெண்சீரே வருதலின் முதற்கண் இயற்சீர் வரினும் ஓசை பிறழாதென்பது கருத்து.

2. அச்சீர் என்றது ஈற்றிலின்ற வெண்சீரை. 'மாசெல்வாய்' என்பதுபோல ஈற்றில் வருவனவற்றை. இவற்றின் இடையும் இறுதியும் நின்ற அசை என்றது 'செல்வாய்' என்னுமிரண்டையும். இவ்விரண்டையும் சேர்த்து நிரையசையாகக் கொள்வலெனின் என்பது கருத்து.

3. ஒன்று—முதலசை.

4. வெண்சீர்—அஃறிணை இயற்பெயராதலின், வெண்சீர்கள் எனப் பொருள்படும்.

5. பன்மை வினைகொள்ளின்—பன்மை வினையைக் கொண்டு வரின். எனவே கொண்டுவந்தால் வெண்சீர்கள் என்று பொருள் கொள்ளலாம். கொண்டுவாராமையிற் பொருள் கொள்ளக்கூடாதென்றபடி.

6. யானைக்கோடு என்பதில் கோடு என்பது, "கண்ணுந் தோளும்" என்னும் (சொல். கக-ம்) சூத்திர விதிப்படி கோடுகள் எனப் பன்மை யுணர்த்தும். அதுபோல வெண்சீரும் வெண்சீர்கள் என்றும் என்றபடி. இறுதியென்றமையானும் அது பன்மைப் பொருள் உணர்த்தும். ஏனெனில், முதல் இறுதி என்று கூறுவது பல சேர்ந்து நின்றவழியேயாகலின். போலக் கொள்க என இயைக்க.

7. பின்னோன் என்ற சொல்லே முன்னோர் பலருளர் என்பதையும் முன்னோன் என்ற சொல்லே பின்னோர் பலருளர் என்பதையும் காட்டும். அவைபோல இறுதியென்பதும் முன் பல சீர் உள என்பதைக் காட்டும். அதனாலும் வெண்சீர் என்பது பன்மை யுணர்நின்றது என்றபடி.

மாகலின். என்றார்க்கு வெண்சீரிறுதி [1] நீடுகொடி குளிறுபுலி வந்தவழி அவற்று முன்னின்ற நேர்பசை நிரைபசைகளைக் கலிப்பாவினுட் கலித்தளையாக்குதற்கு நிரையசை பெயற்றென்று கொண்டுமோவெனின், அற்றன்று, [2] வெண்சீர்களின் இறுதி யெனவே மூன்றாஞ் சீரும் நான்காஞ் சீரும் வெண்சீராகல் கூறி, நிரைமுதல் வெண்சீர் வந்து நிரைதட்டல் (372) எனவே இரண்டாஞ் சீரும் வெண்சீர் வரல்வேண்டுமெனக் கூறி, நிரை தட்டுமெனவே இயற்சீரானும் [4] ஆசிரிய வுரிச்சீரானும் நிரையீ றாயினவெல்லாம் முதற்கண் நிற்குமெனவும் கூறினான். கூறவே, ஆசிரியவுரிச்சீர் இடை நில்லாவெனவும் அங்ஙனம் நிற்பிற் கலி யோசை பிறழுமென்பதூஉமாம் இவர் கருத்தென்பது. அல் லதூஉம் [5] வெண்சீர்க்கு உரியசை யின்மையானும் அற்றன் றென்பது. எனவே, ஈற்றுச்சீர் நிரைமுத லியற்சீர் வரினும் ஆண்டுத் துள்ளலோசை [6] ஒழுங்குமென்பதாம்.

[7] "அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்."
(கலி. 11)

என்பது வெண்சீரிறுதி நிரையொடு தட்ட கலித்தளை.

---

1. நீடுகொடி குளிறுபுலி என்னும் சீர்களில் முன்னின்ற அசைகள் நேரும் நிரையுமாதலின், இவை வெண்சீரின் பின் வரின் நிரையசையாகக் கொள்ளப்படும். அஃதாவது 'புலிவருவாய் நீடுகொடி' எனவும், 'புலிவருவாய் குளிறுபுலி' எனவும் வரின் நீடு, குளிறு என்பன நிரையாகக் கொள்ளப் படும் என்று பொருள் கொள்வேமோ எனின் என்பது கருத்து.

2. வெண்சீர்களினிறுதி என்றதனான் மூன்றாஞ் சீரும் நான் காஞ் சீரும் வெண்சீரென்பது பெறப்படும் என்றபடி.

3. நிரைதட்டல் என்பதனால் நிரையசை முன்வரும் என் பது பெறப்படும் என்றபடி.

4. ஆசிரியவுரிச்சீர் நீடுகொடி குளிறுபுலி.

5. வெண்சீர்க்கு உரியசை இன்மை என்றது நீடுகொடி, குளிறுபுலி என்பவற்றின் முன்னின்ற நீடு, குளிறு என்பவை கள் உரியசையாதலின் அவை வெண்பாவில் வரா என்றபடி. இவை வெண்சீரின்பின் வரா என்பது இவர் கருத்து. ஏனெனில் வெண்பாவிற் கட்டளையடிக்கு உரியசை முதற்சீர் விலக்கப்பட் டமையின். ௩௨௯-ம் சூத்திர உரை நோக்குக. உரியசை—உரி யசைச்சீர்.

6. துள்ளலோசை யொழுங்குதற்கு உதாரணம் "அரிதாய" எனப் பின் வருவது.

7. களித்தலும் என்பது நிரை முதலியற்சீர். இறுதியில் அது வரினும் கலியோசை பிறழும் என்றபடி. அருளியோர் என்பதை வெண்சீர் என்றது அருளி என ஓசை பிளந்து நிற்றலிற்போலும்.



[1] "அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையால்"

என்பது வெண்சீர்கள் பகைத்துவந்து ஈற்றுச் சீரின் முதற்க ணின்ற நேரசை நிரையசைபோலக் கலியோசை கொண்டமை யின் அது கலித்தளை யெனப்பட்டது. இனி, வெண்சீர் நான் கும் ஒன்றி வரினுங் கலித்தளையாகுமேனும், அது வெண்பா வடியெனவும் பட்டுத் திரிபுபடுதலின் அதனைக் கட்டளையடி யென்னாது, இறுதிக்கண் ஒரோவழி ஒருசீர் ஒன்றிவரினும் அதன் முதற்கட் பல வெண்சீர் வந்து பகைத்தலிற் கலி யோசையே காட்டுமென்றானென்பது. அஃதேற் "பண்டாங்க வாடுங்காற் பணையெழில் அணைமென்றோள்" என்றவழி [2] இடை நின்ற சீரின் நேரசை நிரையசை பெயற்றென்றுமோவெனின், அது கட்டளை [3] யடியென்பது "அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி" என்பதனான் அறியப்படும். [4] அல்லதாரும் இவை செவி கருவியாக உணர்தற்கருமை நோக்கி அடியறிபுந் தன்மை யரிதென்று சொல்லுப.

இனி, இயற்சீரானன்றித் தளை [5] கொள்ளாமோவென்பார்

[6] "தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா." (௩௬௭)

என்பதனான் வெண்சீர்க்குத் தளை விலக்கல்வேண்டி, அவ்வெண் சீரினையும் இயற்சீராக இயற்றிக்கொள்ளப்படுமென்றற்கு ஒரு வெண்சீரின் ஈற்றசை நிரையசை பெயற்றென்றுனெனக் கூறி, [7] ஞாயிறென்னும் இயற்சீரினை மாசெல்வாயெனப் பின்னுமொரு

---

1. அடிதாங்குமென்னு மடியே இச் சூத்திரத்திற்குக் காட் டிய உதாரணம்.

2. இடைநின்ற சீர் 'ஆடுங்கால்' என்பது.

3. அடி என்பது அடியன்றென்பது என்றிருக்கவேண்டும். ச்சினார்க்கினியருரை நோக்குக.

4. அல்லதாரும் — தொல்காப்பியரல்லாதாரும். இவை— இக்கலியடிகள்.

5. கொள்ளாமோ — (வெண்பாவிற்குக்) கொள்வேமோ என்பது பொருள்.

6. தன்சீர் என்றது வெண்சீரை. தளை விலக்கல் என்றது வெண்சீரடுத்த வெண்சீர் வந்து தளைகோடலை விலக்கல். இயற் சீர் வெண்டளையே கட்டளையடிபெறும் வெண்பாவிற் குரிய தென்றபடி.

7. ஞாயிறு என்னும் இயற்சீரினை நிறுத்தி; எப்படி நிறுத்தி னின், திரியாமல் ஞாயிறு என்றே நிறுத்தி என்றபடி. பின்னு

செல்லுமென்பது. கலிப்பாவிற்கு ஒன்றாது வருந் தூரிமை யுடைய; வெண்சீரெனவே, வெண்பாவிற்கு ஒன்றாது வருதல் யாண்டுமில்லை, ஒன்றியவழி வல்லதென்பது உடம்படப்பட்டது. (உகூ)

---

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே"
என்னும் இச் சூத்திரத்திற்குப் பேராசிரியர் கொள்ளும் உரையையும் பிறர் உரைகளை அவர் கடாவிடைகளான் மறுக்குமாற்றையும் விளக்கற்பொருட்டு இங்கே சுருக்கிக் காட்டுகின்றாம்.

இச் சூத்திரத்திற்குப் பேராசிரியர் கொள்ளுமுரை.

ஒரு கலியடியுள் வந்த பல வெண்சீர்களின் ஈற்றிலுள்ள சீரின் முதலிலுள்ள நேரசை நிரையசை யியல்பாகுமென்பது. எனவே முன்வந்த வெண்சீர்களின் முதலசைகளெல்லாம் நிரையசையாய் ஒன்றாது எங்ஙனிடத்திலேயே ஈற்றுச் சீரின் முதலசையாகிய நேர் நிரையாம் என்பது இதனாற் கொள்ளப்படுமென்பதும் பெறப்பட்டது. என்னை? ஈற்றுச்சீரின் முதலிலுள்ள நேரசையை நிரையசையாய்க் கொள்ளவேண்டுமெனவே முன்வந்த சீர்களின் முதலசைகளும் நிரையசையாயே வரல்வேண்டுமென்பது பெறப்படலின் என்பது அவர் கருத்து. அங்ஙனமாதலை,

"அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையான்"
என்னும் உதாரணத்தின் வைத்து அறிந்துகொள்க.

இனி, இதற்குப் பிற ருரையுரைப்போருரை, வெண்சீரீற்றில் நீடுகொடி, குளிறுபுலி வந்தவழி அவற்றின் நேர்பசை நிரைபசைகளை நிரையாகக் கொள்ளுதல் என்பது. அதன் மறுப்பு அங்ஙனங் கொள்ளிற் கலியோசை யழியும் என்பது ஒரு நியாயம். மற்றொன்று நீடுகொடி, குளிறுபுலி ஆசிரியவுரிச்சீராதலின் வெண்பாவிற் கட்டளையடிக்கு அவை வாரா. ஆதலின் அவை வெண்பாவினியற்றாகிய கலிக்கும் வெண்சீர்க்குப்பின்னே வாரா என்பது. மேற்காட்டிய ஆசிரியவுரிச்சீரிரண்டும் கலிக்கு வருமெனின், அவை முதலில் வருமன்றி இடையில் வாராவென்பதும் வரிற் கலியோசை அழியுமென்பதும் இவர் கருத்தாம். வெண்பாவில் ஆசிரியவுரிச்சீர் வாராவென்பதனை, "வெண்பாவினுள் ஆசிரியவுரிச்சீர் நான்கும் ஒழித்து ஒழிந்தசீர்



[வெண்சீர் கட்டளையடியல்லாவழி ஆசிரியவடியினுள் வருமெனல்]

இன்சீ ரியைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையா ராசிரிய வடிக்கே.

இது கட்டளையடியல்லாவழிச் சீர் மயங்குமா றுணர்த்

...ள் : இன்னோசைத்தாகிய துணிவிற்றாகி வரின் ஆசிரிய ...ண் வெண்சீரும் வரப்பெறும் என்றவாறு.

"...மிழ்கடல் வரைஇய விண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து."
தலையாலமென்றவழி ஆசிரியவடியுள் இன்சீரியைய வெண் ...ந்தது. முன்னர் வெண்சீரினை,
"...இன்பா தொடைக் கொருங்கு நிலையில."
விலக்கி ஈண்டு வரையாரென்றமையின் [1] அது கட் ...டிக்கென்பதூஉம் [2] இது கட்டளையடிக்கன்றென்பதூஉம்

1. அது—அச்சூத்திரவிதி.
2. இது—இச்சூத்திரவிதி.

---

...ற்றுமூன்றாம்" என்று கசுஉ-ம் சூத்திரவுரையுட் கூறலா "நீடுகொடி குளிறுபுலி வெண்பாவின் கட்டளையடிக்கண் ..." என்பதனை கஉக-ம் சூத்திரவுரையுட் கூறலானுமறிக. ...சையென்றது உரியசைச்சீரை. இவை சிறுபான்மை கலி ...ன் வரின் முதற்கண் வருமென்பது கருத்து.

இனி, "பண்டாரங்க மாடுங்காற் பணையெழி லணைமென் ..." என இதில் வரும் வெண்சீர் முதலசை நிரையசையியற்று கூறுமோவெனின்? அது கட்டளையடியன்றாதலின் ...தன் ஆராய்ச்சியின்றென்பது. கட்டளையடியன்றென்பது ...ஞ் சீருமிசையொடு சேர்த்தி என்பதனுள் அறியப்படும்.

இனி, ஒருரை "நன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா" ...சூத்திர விதிப்படி வெண்சீரின் ஈற்றசைமுன் நேரசை ...ரால், வெண்சீர் வெண்டளையாமாகலின் அது கட்டளை ...கேலாமையின் அதனை விலக்கவேண்டி மாசெல்லாய் முத வெண்சீரின் ஈற்றசையை நிரையசையாக்கி ஞாயிறு ...ய வைத்து வெண்பாவில் தளை கொள்ளப்படும் எனவும்,

பெற்றும், வருகுவதாயினென்று ஒருமை கூறினமையானும் இவ்வியவென்றதனானும் ஓரடிக்கண் ஒன்றே யாண்டும் வருவ தெனக் கொள்க. (௯௦)

[வஞ்சிச்சீரும் கட்டளையடியல்லாவழி ஆசிரியத்துள் வருமெனல்]

௯௧. அந்நிலை மருங்கின் வஞ்சி யுரிச்சீர்
ஒன்றுத லுடைய வோரோர் வழியே.

இது வஞ்சியுரிச்சீர் ஆசிரிய அடியுள் மயங்குமாறுணர்த் திற்று.

இ—ள்: கட்டளையடியல்லாதவழி இன்சீரியைய வருகுவ தாயின் வஞ்சியுரிச்சீர்களும் ஓரோர்வழி ஆசிரியத்துள் வரப் பெறும் என்றவாறு.

ஒருவழியென்னாது ஓரோர்வழி யென்றதென்னையெனின்? அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் பத்துச்சீரே வருமென்பதூஉம் அவை வருங்காலும் பயின்று வாராவென்பதூஉம் அறிவித்தற் கென்பது. அவை மாசேர்சுரம் புலிசேர்சுரம், மாசெல்காடு புலி செல்காடு, மாசெல்கடறு புலிசெல்கடறு, பாம்புசேர்வாய் பாம்பு

---

மாசெல்வாயின் ஈற்றசைகளை ஞாயிறு என வெண்பாவிற் கொள் வதுபோல அதனியற்றுறிய கலிக்கு ஞாயிறு முதலியபோன்ற இயற்சீர் முதல்வரின் (அஃதாவது "ஞாயிறு புலிசெல்வாய் மாசெல்வாய்" என வரின்) ஞாயிறு முதலியவற்றையும் கலித் தளையாக்குதற்கு மாசெல்வாய் என வைத்துக்கொள்ளப்படு மெனவுங் கொண்டு, ஞாயிறு என்பதன்முன் புலிவருவாய் வரின் அது மாசெல்வாய்முன் நிரைவந்த கலித்தளையேயாமென்று கொள்வர். இவ்வுரையாலே வெண்சீரின்முன் நிரைமுதல் வெண்சீர் வரின் கலித்தளையாமென்பதே அவர் கருத்தென்பது பெறப் படலின், அவர் கருத்தின்படி கோடற்கு வெண்சீரின்முன் நிரைவந்தாற் கலித்தளையாமென்பதற்குச் சூத்திரவிதி வேறு வேண்டும்; அவ்விதி இச்சூத்திரத்தாற் பெறப்படாது. ஆக லானும், இயற்சீர்முன் நிரைமுதல் வெண்சீர் வரின் கலித்தளையா மென்பதற்கு விதியிருத்தலின் (௯௭௨-ம் சூத்திரம்) இயற் சீரை வெண்சீராக்கல் வேண்டுவதின்மையானும் அது பொருந்தா தென்பது.



வருவாய், களிறுசேர்வாய் களிறுவருவாய் என்பன. அவற்றுக் குச் செய்யுள்:

"மாரியொடு மலர்ந்த மாத்தாட் கொன்றை
குறிஞ்சியொடு கமழுங் குன்ற நாடன்."

என மாசேர்சுரம் புலிசேர்சுரம் என்பன அடிமுதற்கண் வந்தன.

"முன்றிலொடு மஞ்ஞை மூங்கில் கொதிக்கும்."

என்பது மாசெல்காடு வந்தது.

"அலரிதழ் குவளைவாய் மாந்தர் சேறுக்கின்."

எனப் புலிசெல்காடு வந்தது.

"கண்போன் மலர்ந்து வண்டுமயங்கு தாமரை."

என மாசெல்கடறு வந்தது.

"காடு வழங்கு குன்றுகண்டு போகி."

எனப் புலிசெல்கடறு வந்தது.

"காடுசேர வழிதரு கடுங்கண் யானை."

எனப் பாம்புசெல்வாய் வந்தது.

"செந்து சிவையாச் செங்கால் சிறுதினை."

எனப் பாம்புவருவாய் வந்தது.

---

இன்னும் வெண்சீரீற்றசை நிரையசையியற்றே என்பதில் இயற்று என்று ஒருமை வாய்பாட்டாற் கூறினமையால் 'மா செல்வாய்', 'புலி வருவாய்' என்பவற்றிலுள்ள ஈற்றசையென்று கொள்ளப்படுமேயன்றி, ஈற்றசையோடு சேர்த்து இடைநின்ற ('செல்' என்னும்) நேரும், ('வரு' என்னும்) நிரையுங் கொண்டு இயற்சீராக்க முடியாமையானும் அது பொருந்தாதென்க. மா செல்வாய் புலிவருவாய் என்பவற்றின் ஈற்றசையை (வாய் என் பதை) நிரையசையாகக் கொள்ளின் அவை வஞ்சியுரிச்சீரா மென்பது. ஆதலானும் அவ்வாறு பொருள்கோடல் பொருந்தா தென்பது. இனி வெண்சீரின் ஈற்றசையெனக் கொள்ளாது, வெண்சீரென்பதை எழுவாயாகக் கொண்டு ஈற்றசை நிரை என் பதை, ஈற்றசை நிரையாகவுள்ள இயற்சீர் எனக் கொண்டு, வெண் சீரானது இயற்சீர் இயற்று எனப் பொருள் கொள்ளினும், "ஈற்றசை நிரை"யியற்று என்று சூத்திரமிருக்கவேண்டும். அவ்வாறிராது "நிரையசை" என்று இன்னுமோர் அசை மிகையாயிருத்தலின் அவ்வாறும் பொருள்கொள்ள முடியாது. அதனானும் வெண்சீரை இயற்சீராக்கல் முடியாது. அன்றியும்

"மருந்து நாடாத் திருந்து செம்பித் கைக்கும்,"
எனக் கனிறுசெல்வாய் வந்தது.

"கடறுகவாச விழித்து கண்யாறு வரிப்ப."
எனக் கனிறுவருவாய் வந்தது. பிறவுமன்ன.

[1] நேர் நிரையாகியும் நேர்பு நிரைபாகியும் ஈறு முதல் பெறச் சீர் வந்தது. (௩௪௩)

[அடியாவது இதுவெனல்]

௩௪௪. **நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே.**

இது முதற் சூத்திரத்துள் "யாத்தசீரே யடியாப்பெனாஅ" என நிறுத்தமுறையானே சீருணர்த்தி அடியுணர்த்தவெழுந்தான் அவற்றுள் இது நாற்சீரடி யுணர்த்திற்று.

இ—ள்: அடியென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன நாற்சீரடி என்றவாறு.

எனவே, இருசீரானும் முச்சீரானும் ஐஞ்சீரானும் அறு சீர் முதலியவற்றானும் வருமாயினும் அவை சிறப்பிலவென்ற வாறும். இருசீரான் வருவதனை என்ன அடியென்னுமோவெனின்

1. நேர்நிரை—உம்மைத்தொகை. நேர்பு நிரைபு என்பதும் உம்மைத்தொகை.

2. ஈறும் முதலும் ஆகிப் பெறச் சீர் வந்தது என இயை யும். ஆகி என்பன ஆக எனவுமிருக்கலாம்.

வெண்பாவிற்குத் தளைகொள்ள வெண்சீரை இயற்சீராக்கி மீளக் கலிப்பாவிற்கு இயற்சீரை வெண்சீராக்குதல் வினையி னுழப்பாகி முடியுமாதலின் அது பொருந்தாதென்பது. அன்றியும் வெண்பா விற்கு ஒன்றுதல்தான் வரவேண்டுமென்னும் விதி வேண்டியதில்லை. அங்ஙனங் கொள்ளின், வெண்சீரின்முன் நிரைமுதல் வெண்சீர் வருதலும் ஒன்றாது வரின் அதனையும் (கலித்தளையென்னாது) ஒன்றாது வந்த வெண்டளையெனலா மாதலின் வெண்பாவிற்கு வெண்சீர் ஒன்றி வருதலே இலக்கணமாம். அது சீர்வகை யடி. யெனக் கொள்ளப்படுமாதலின் என்பது கருத்து.

வினையினுழப்பு — தொழிலற்ற முயற்சி = பயனில்லாத முயற்சி.



...யெல்லாம் [1] எழுத்தளவையானே மேற்பெயர் கூறும். அவ் ...றே சீர்வகையானுங் கொள்ளப்படுமென்பது. சுருங்கிய எழுத் ...ன் வருவன குறளடியென்றும் அவற்றின் ஏறிய எழுத்தான் ...வன சிந்தடியென்றும் இடைநின்றன அளவடியென்றும் அவற் ...ன் நெடியன நெடிலடியென்றும் அவற்றினும் நெடியன கழி ...டிலடியென்றுங் கூறுமாகலான் அவ்வாறே இருசீரடி குறளடி ...யென்றும் முச்சீரடி சிந்தடியென்றும் நாற்சீரடி அளவடியென் ...ம் ஐஞ்சீரடி நெடிலடியென்றும் அறுசீர் முதலியன கழிநெடி ...யென்றுங் கோடுமென்பது. இவற்றினெல்லாம் நாற்சீரடி சிறந்த ...ன்றதென்னையெனின், அளவிற்பட் டமைந்தமையானும் அது ...மின்று வருதலானுமென்பது. உதாரணம்:—

"திருமழை தலைஇய விருணிற விசும்பின்." (மலைபடு. க)

...னவும்,

"அறுகலை யுண்டி அமர்ந்தில்லா ளூட்ட." (நால. க)

...னவும்,

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்." (கலி. கக)

...னவும் இவை [2] மூன்று பாவினும் அளவடி வந்தவாறு. [3] இவற் ...று விகற்பமெல்லாம் முன்னர்ச் சொல்லுதும். (௩௪௪)

[நாற்சீரான் வரும் ஓரடிக்கண்ணே தளையுந் தொடையுங் கொள்ளப்படுமெனல்]

௩௪௫. **அடியுள் ளனவே தளையொடு தொடையே.**

இதுவுமது. நாற்சீரடியது சிறப்புணர்த்திற்று. எதிரது ...ாக்கியதோர் கருவியெனினும் அமையும்.

இ—ள்: முன்னர்க் கூறிய நாற்சீரடியுள் உள்ளனவே தளை ...யும் தொடையும் என்றவாறு.

மற்று மாத்திரையும் எழுத்தும் அசையுஞ் சீரும் அவ் ...வடியுள்ளன அல்லவோவெனின்;—அற்றன்று; அவ்வடிக்கணுள் ...ளனவெல்லாங் கூறுகின்றானல்லன் இதுவென்பது. என்னை?

[1] எழுத்துவகையாற் பெறலை ௩௪௧-ம், ௩௪௭-ம், ௩௪௮-ம், ...௪௯-ம், ௩௫௦-ம் சூத்திரங்களை நோக்கி அறிக.

2. மூன்று பாவாவன—அகவல், வெண்பா, கலி என்பன.

3. இவற்றது விகற்பம்—இவ்வளவடிகளின் வேறுபாடு.

நாற் றளைப்பகுதியாற் கட்டளையடியென [1] உறழ்ந்ததூஉம், அது நாற்றிருபத்தைந்தடியென வரையறை கூறுவதூஉம், அவ்வள வடியே என்றற்கு [2] 'நாற்சீர்க்கண்ணது தளை' என்றானென் பது. மூன்றாஞ் சீர்வகையான் வருங்குறும் அடியன்றிக் கட்டளை யடியெல்லாந் தளைவகை யுடையவென விதந்தோதி வந்ததனானே நாற் றளைகொள்வது நாற்சீரடிக்கணென்பான் 'அடியுள்ளது தளை' என்றானென்பது. [3] மற்றையடிக்கட் டளைகொளின் அது வரையறையின் [4]றென்றுமாகலின் ஈண்டு வரைந்தோதினா னென்பது. அது தக்கது; மற்றுப் பொழிப்பும் ஒரூஉவும் போலாத மோனை முதலிய தொடையெல்லாம் [5] அடியிரண் டியையத் தொடுக்கவேண்டுமன்றே? அவற்றை 'அடியுள் ளனவே தொடையும்' என்றதென்னையெனின்,—அற்றன்று; நாம் [6] தொடையுறழச் சீர் கொள்வதூஉம் இவ்வளவடிக்க ணென்பது கூறினான், ஆண்டுத் தொடை கூறும்வழி [7] வரை யாது கூறுமாகலி னென்பது. எனவே, கட்டளைப்படுப்பதூஉந் தொடையுறழ்தற்கு இடனாவதூஉம் நேரடியேயெனச் சிறப் பித்தவாறு. (௧௪௫)

[ நாற்சீர் கொண்ட ஓரடியைக் கடந்து தளையுந் தொடையும் வாரா எனல் ]

௧௪௬. **அடியிறந்து வருத லில்லென மொழிப.**

இதுவும், கட்டளைப்பாட்டிற்கும் தொடைக்கும் ஆவதோர் கருவிபுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: அறுநூற்றிருபத்தைந்து அடியுள்ளும் ஓரடியின் இறந்துவாரா மேற்கூறிய தளையுந் தொடையும் என்றவாறு.

---

1. உறழ்தல்—பெருக்கல்.

2. நாற்சீர்க்கண்ணது—நாற்சீரடிக்கண்ணது என்றிருப்பது நலம்.

3. மற்றையடிக்கண் தளைகொள்ளின் எனக் கண்ணழிக்க. மற்றையடி—இருசீரடி, முச்சீரடி, ஐஞ்சீரடி, அறுசீரடி முதலி யன. சீர்வகையடியுங் கொள்ளப்படும்.

4. என்றும்—என்பான்.

5. அடியிரண்டை இயைத்தே மோனை முதலிய தொடை பார்க்கப்படும் என்றபடி.

6. தொடையுறழச் சீர் கொள்வது அளவடிக்கணென்பதே யன்றி ஓரடிக்கண் என்றல்லவென்பது கருத்து.

7. வரையாது—அளவடி என்று வரையாது.



என்றது, மேற்கூறிய தளைவகையேயன்றி, அடியோடு அடிக்கூட்டத்துத் தளைகொள்ளுங்காலும் ஓரடிக்கண்ணே வழு வாமற் கோடல்வேண்டுமெனவும், அங்ஙனமே தொடை கொள் ளுங்காலும் வந்தவந்த அடியே வரப்பெறுவதெனவுங் கூறிய வாறு.

எனவே, தேமா தேமா தேமா தேமாவென்னும் அடிக் கண் தொ[illegible] கொள்ளுங்கால்,

"வாமன [illegible]த்தோன் மன்ற."

என முன்வந்த அடியேயாகவேண்டுமென்பதூஉம், அன்றி,

"தாமரஞ் சோலைத் தீந்தே னுண்ட
காமர் தும்பி யாதல் 'கண்டது.'"

என வழித் தளை வழுவாகிப் பதின்மூவாயிரத் தெழுநூற்றெட் டெனப்பட்ட தொடைப்பகுதிப் படாவென்பதூஉம் பெற்றாம்.

இனி, வெண்பாவினுள் அவை வருமாறு;

"சென்றே யெறிப வொருகாற் சிறுவரை
நின்றே யெறிப பறையினை—நன்றேகாண்" (நாலடி. ௨௪)

எனப் பன்னிரண்டெழுத்தடி ஒன்றினையும் இருகாற் சொல் லிக் கூட்டி எதுகைத்தொடை கொள்ளுங்கால் அடியோடு அடிக் கூட்டத்துத் தளைவகை சிதையாது வந்தமையின் அத்தொடை பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டென வரையறைப்பட்ட தொ டையுட்பட்டது.

"யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்
றானூட யானுணர்த்தத் தானுணர்ந்தான்—தேனூறு"
(முத்தொள்ளாயிரம் ௧௦௪)

என்றவழி, பதினான்கெழுத்தடியே தொடுத்தமையின் அடி யிறந்து வந்ததன்றாயினுந் [2] தளைவகை ஒன்றுதலின் இது பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டி னுட்படாதாயிற்று.

"வண்டு வாகு வாகு வாகு."

என்கின்ற அடியினை மீட்டுத்தந்து தொடை கொள்ளுங்கால்,

---

1. கண்டது என்பதை ஞாயிறு என்று கோடலின், மீளவும் அந்த அடியே வருங்கால் தளைவழுவாம். ஆதலின் அடங்கா தென்க.

2. தளைவகை ஒன்றல் தன்சீர் வந்தமையால் என்க. "தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா" என்பது சூத்திரம். தன்சீர்—வெண்சீர்.

வண்டு வரகு வரகு வரகு

என்றது, [1] நேரொன்றாசிரியத்தளை தட்குமாதலால் இது வழு வெனப்படுமென்பது. கலிப்பாவிற்கு [2] அன்னதோர் வரையறை யில்லை; [3] இருவாற்றானும் வருமென்பது, என்னை?

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே." (௩௪௧)

என்றாராகலின், மேலைச் சூத்திரத்தானே தளைவகை சிதையா மல் அறுநாற்றிருபத்தைந்து வகைப்படுவது நாற்சீரடியே என்பதூஉங் கூறி, அந் நாற்சீரடியே காம் முன்னர் வேண்டுந் தொடை விகற்பத்திற் குரியவென்பதூஉங் கூறினான். இச் சூத்திரத்தானே அத்தொடை கொள்வது தம்மின் வேறு காத இரண்டடிக்கண்ணென்பதூஉம் அறுநாற்றிருபத்தைந் தடியுள் ஒன்றனை இருகாற் சொல்லித் தொடை கொள்ளப் படுமென்பதூஉம், அங்ஙனந் தொடுக்குங்காலும் அடியோடு அடிக்கூட்டத்தின்கண்ணுந் தளைவகை சிதையாமல் வேண்டு மென்பதூஉங் கூறியவாறாயிற்று. இவற்றானெல்லாம் நாற்சீ ரடியே சிறப்புடைத்தென்பது பெற்றாம். [4] இன்னும் [5] அதன் சிறப்புடைமையே [6] கூறுகின்றான். (௩௪௬)

[நாற்சீர் அடிகள் இரண்டும் பலவும் அடுத்துவந்த தொடையே பாட்டெனல்]

௩௪௭. அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே.

இது நாற்சீரடியே விசேடித்துக் கூறி, அதனது இடத் தானே பாட்டென்பதோர் முதற்பொருள் தோன்றுமென்ப துணர்த்துகின்றது. 'எனப்படும்' என்றதனான் இவ்வடிகளான் வந்த செய்யுளே சிறப்புடையனவென்பதூஉஞ் சொல்லியவாறு. மாத்திரை முதலிய [7] வற்றை உறுப்புக்களான் இத்துணை

1. இதுவும் வெண்பாவடி ஆதலிற் றளைவழு.

2. அன்னதோர் வரையறை என்றது, வெண்பாவிற்குப் போன்ற வரையறையை.

3. இருவாற்றானும் வரும் என்றது, ஒன்றியும் வரும் ஒன்றா தும் வரும் என்றபடி.

4. இன்னும்—மேலும்.

5. அதன்—அந்நாற்சீரடியின்.

6. கூறுகின்றான் என்றது ஆசிரியனை.

7. வற்றை என்பது சேர்த்து எழுதப்பட்டது. அது வேண் டியதில்லை.



மாத்திரை கொண்டது செய்யுளென்றானும் இத்துணை அசையுஞ் சீருந் தொடையுங் கொண்டது செய்யுளென்றானும் அளவியல் [1] கூறியவுறுப்புக்களான் வரையறுக்கப்படா. அடியானே கூறச் செய்யுட் புலப்பாடாமென்பது. 'எனப்படும்' என்றதனான், [2] ஒழிந்த அடிகளானும் அவ்வாறு வருமாயினும் அவை சிறப் பிலவென்பது.

இ—ள்: அடியின் சிறப்பென்பது—அடி இரண்டும் பலவும் அடுத்துவந்த தொடையே பாட்டு என்றவாறு. சில இடை கடைச்சங்கத்தாரும் பிற சான்றோரும் நாற்சீரடியான் வரும் ஆசிரியமும் வெண்பாவுங் கலியுமே பெரும்பான்மையுஞ் செய் தார்; வஞ்சிப்பாச் சிறுவரவிற்றெனக் கொள்க.

"மாவேவன் மார்பி னாரம் போல
மணிவரை மிழிதரு மணியின ருவி
தன்மேசன் மான்று நாட
மன்புமேவி துடைய வின்சொல் வினனே."

(தொ. சூ. ௩௩௦—௪௬௬—பேர்)

என நாற்சீரடியான் ஆசிரியம் வந்தவாறு.

"மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்." (நாலடி. ௨௧)

என்பது அளவடியானே வெண்பா வந்தவாறு.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்."

(கலி. ௧௧)

எனக் கலிப்பா அளவடியான் வந்தது. பிறவுமன்ன. (௩௪௭)

[நாற்சீரடியின் பகுப்பும் அவற்றின் பெயரும் முறையுந் தொகையும் இவையெனல்]

௩௪௮. நாலெழுத் தாதி யாக வாறெழுத்
தேறிய நிலத்தே குறளடி யென்ப. (௩௪௮)

௩௪௯. ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே
யீரெழுத் தேற்ற [3] மல்வழி யான. (௩௪௯)

1. கூறியவுறுப்புக்களான் என்பது கூறி அவ்வுறுப்புக் களான் என்றிருப்பது நலம்.

2. ஒழிந்த அடி—அளவடி அல்லாத அடி.

3. அவ்வழியான எனவும் பாடம்.

௩௯௦. பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
யொத்த நாலெழுத் தேற்றலங் கடையே. (௩௮)

௩௯௧. மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே
யீரெழுத்து மிகுதலு மியல்பென மொழிப (௩௯)

௩௯௨. மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
யீரெழுத்து மிகுதலு மிவட்பெறு மென்ப. (௪௦)

இவை ஐந்து சூத்திரமும் உரையியைபு நோக்கி உடனெழுதப்பட்டன. நாற்சீரடி இத்துணைப் பகுதிப்படுமென அவற்றது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துகின்றன.

இ—ள்: நாலெழுத்து முதலாக ஆறெழுத்தளவும் வந்த நிலம் மூன்றுங் குறளடியெனவும், ஏழெழுத்து முதன் மூன்று நிலனுஞ் சிந்தடியெனவும், பத்தெழுத்து முதல் ஐந்து நிலனும் அளவடியெனவும், பதினைந்தெழுத்து முதன் மூன்று நிலனும் நெடிலடியெனவும், பதினெட்டெழுத்து முதல் இருபதெழுத்துவரை மூன்று நிலனுங் கழிநெடிலடியெனவுஞ் சொல்லுப ஆசிரியர் என்றவாறு.

குறளடி நிலங்களை [1] வகுத்தோதியாது, [2] ஒழிந்தனவும் வகுத்துரைத்தான், அவை முதல் இடை கடையென மூன்று கூற்றன் ஒன்றொன்றனிற் [3] சிறப்பு இழிபுடையனவென்று கொள்ளினுங் [4] கொள்ளலாமென்பது. அவற்றுக்குச் செய்யுள்:—

குறளடி {
பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து சூழி தேர்ந்து
வண்டு சூழ விண்டு வீங்கி

சிந்தடி {
தீர்வாய் கொண்டு நீண்ட நீல
சூர்வாய் யூதை வீச வூர்வாய்
மணியேர் துவண்டோட டோல்வி மாலை

1. வகுத்தென்றது—குறளடியை. நாலெழுத்தடி ஐந்தெழுத்தடி ஆறெழுத்தடி என வகுத்தமையை. ஏனையவுமன்ன.

2. ஒழிந்தன—குறளடி ஒழிந்த அடிகள்.

3. சிறப்பு இழிபு என்றது நான்கு எழுத்தடியினும் ஐந்து எழுத்தடி இழிபுடையது; அதினும் ஆறெழுத்தடி இழிபுடையது எனவும், ஆறெழுத்தடியினும் ஐந்தெழுத்தடி சிறப்புடையது; அதினும் நான்கெழுத்தடி சிறப்புடையது எனவும் கொள்ளப்படும் என்றபடி. ஏனையவுமன்ன.

4. கொள்ளாமல் என்னும் பாடம் பொருத்தமன்று.



நேரடி {
நன்மணங் கமழும் பன்னெல் லூர
வளமையோர் மென்பூ சாம்பி நெருங்க
வரிவளை யீ ரோதி பெருந்திரை வளமுக
பிதும்பமன் பலரிடை பெயர்த்த மாவி
வறுந்தமை துயல்வருஉஞ் செறிந்தேந் தல்கு

நெடிலடி {
எனிதகைட யானை இய வரியமைச் சிலம்பின்
மணிமருள் வணர்குழல் வளரிளம் பிறைநுத
லொளிதிகழ் வயங்கிழை பருவுடை மகளிரொடு

கழிநெடில் {
தளிர்முலை [1] முறுங்கிய வணிதிகழ் மணிநக
திருந்தளவு மலரளவு கரும்புளவு நறுந்தொடை
கன்னளவு கலனளவு [2] நலனளவு நனளவு

பெருமணம் புணர்ந்தனை யென்பவஃ
தொருநீ மறைப்பி னொழிகுவ தன்றே.

...னை இதனுட் பதினேழு நிலத்து ஐவகையடியும் முறையானே ...க்கவாறு கண்டுகொள்க. குறளடி சிந்தடி அளவடி நெடிலடி ...கழிநெடிலடியென நாற்சீரடிதானே ஐவகைப்படுமென்று அவற்றது பெயரும் முறையுந் தொகையுங் கூறினான். தொகை பதினேழ் நிலத்து ஐவகையடியென்பது எண்ணிப்பார்க்க. இப்பெயரெல்லாங் காரணப்பெயர். மக்களுள் நீரக் குறியானைக் குறளனென்றும், அவனினெடியானைச் சிந்தனென்றும், ஒப்பமைந்தானை அளவிற்பட்டானென்றும், அவனினெடியானை நெடியானென்றும், அவனினெடியானைக் கழியநெடியானென்றுஞ் சொல்லுப. அவைபோற் கொள்க இப்பெயரென்பது. (௪௦)

[சீர்கள் ஐந்தெழுத்தின் மிக்கு வாராவெனல்]

௩௯௩. சீர்நிலை தானே யைந்தெழுத் திறவாது.

இது, மேலெழுத்தெண்ணி அடிவகுக்கப்பட்ட ஐவகையடிக்குஞ் சீரும் எழுத்தெண்ணியே வகுக்கின்றது.

இ—ள்: சீரது நிலைமைதான் ஐந்தெழுத்து இறந்து வாராது என்றவாறு.

பெருமைக்கு எல்லை கூறி வரையறுக்கவே, சிறுமைக்கு எல்லை வரையறைப்படாது ஒன்று முதலாக வருமென்பதாம். சீர்நிலைதானேயென்பது பிரிநிலை ஏகாரம். அதனை அசைநிலை ...த் பிரித்துக் கூறியவாறு. அதனை அவ்வாறு பிரித்துக் கூறவே

1. முழங்க எனவும் பாடம்.

2. கலனளவு கலனளவு எனவும் பாடம்.

¹அசை சீராயவழி ஐந்தெழுத்திறவாமை அவற்றுக்கில்லையென்பது கொள்ளப்படும். அஃதேல், ²அவற்றுக்கெல்லை கூறானோ வெனின்,—அவை மூன்றெழுத்தி னிறவாவென்பது ³உரையிற் கொள்க. தானென்பதனை ⁴இலேசுப்படுத்துக்கொள்ளினும் அமையும். மற்றிவற்றையுஞ் சீர்நிலை பெறுமென்பவாதலாற் சீரென அடக்கானோவெனின்,—அடக்கானன்றே; ⁵அவை சீர்நிலைமைபெய்தியவழியும் அசை யிரண்டாகாமையினென்பது.

> "இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
> தளைவகை சிதையாத் தன்மை யான." (தொ. பொ. ௩௪௦)

என்று ஆண்டு ⁶வரைந்தவாயின், அதனைச் சீர்நிலையென வாளாது பொதுவகையாற் கூறான். ⁷அதுவே கருத்தாயின், அவற்றை நேர்பசை நிரைபசையெனக் கூறியதனானும், அவற்றை

> "ஈரசை கொண்டு மூவசை புணர்ந்துஞ்
> சீரியைந் திற்றது சீரெனப் படுமே." (தொ. பொ. ௩௨௧)

என்றதனானும் பயக்கறிதென்னையென மறுக்க; அல்லதூஉம், 'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றுக' எனவே, இவைதா மியற்சீரல்ல, ⁸அவற்றது செய்கை இவற்றானுங் கொள்கவென்றது துணையே ஆண்டுக் கூறியதென்பது; அல்லதூஉம், தேவரும் நரகரும் மக்கட்பாற்படுத்துக் (ஞூ-அ) இணை கொள்ளப்படுமென்ற துணையானே பிறப்பானும் ⁹பெற்றியானும் மக்களென வழங்கார்; அதுபோல, அசைநிலைத் தளையும் சீர்நிலைத் தளையும் ஒக்குமென்ற துணையானே அவை அசைச்சீரெனவே அடை-

1. அசை—தனியசை. அவை நேர் நிரை நேர்பு நிரைபு. இவையும் சீராக நிற்கும். அசைச்சீராயவழி எனவும் பாடம். அது சிறப்பின்று.
2. அவற்றுக்கு—அசைச்சீர்களுக்கு.
3. உரையிற் கொள்க—உரையிற் கோடல் என்னுமுத்தியாற் கொள்க.
4. இலேசு—மிகை.
5. அவை—அவ்வசைச்சீர்கள்,
6. வரைந்தது என்றது தளை சிதையாமல் இயற்றிக்கொள்க என்று வரைந்தமையை. எனவே அது சீராக இயற்றிக்கொள்ளப்படுமன்றி இயற்கைச் சீராகாது என நியமித்தவாறாயிற்று.
7. அதுவே—சீர் என்பதுவே.
8. அவற்றது—இயற்சீர்களது. செய்கை—தளைத்தற்செய்கை.
9. பெற்றி—இயல்பு, தன்மை.



படுத்தே சொல்லவேண்டுவனவற்றையும், வாளாதே சீரெனப் படுவனவற்றையும் ஒருவகையானே சீர்நிலையென மயங்கக் கூறல் (௩௧௫) குற்றமாமென்பது. மயங்கக் கூறல் குற்றமன்றென்பாரும் உளராயின் அவர் கருத்தினான் அதுவும் அமையுமென்பது. ஒரு சாதியல்லனவற்றைச் ¹சாதியொன்றெனவும் புகலார்; அதுபோலச் சிறிதெண்ணமுடைய இயற்சீர் உரிச்சீர்களைச் சீரெனக் கூறி அவ்வினத்தனவல்லாத அசைச்சீரை இலேசினாற் ²கொண்டானென்பது.

ஓரெழுத்தசைச்சீர் நாளென ஒன்றேயாம்; இதனோடு வண்டு என்னும் அசைச்சீர் கூட்ட இரண்டாம்.

ஈரெழுத்தசைச்சீர் நான்கு; அவை: தேமா ஞாயிறு போது போரேறு என வரும். பின்னு வரகு என்னும் அசைச்சீரிரண்டனோடும் கூட்ட ஆறாம்.

மூவெழுத்தசைச்சீர் பத்து; புளிமா பாதிரி வலியது மேவுசீர் கன்னுறு பூமருது காடியாறு விறகுறு மாசெல்வாய் நீடுகொடி எனவிவை. அரவு என்னும் அசைச்சீரோடுங் கூட்டப் பதினொன்றாம்.

நாலெழுத்தசைச்சீர் ஒன்பது; அவை: கணவிரி காருருமு பெருநாணு கருமுகந்தி மழகளிறு மாவருவாய் புலிசெல்வாய் நாணுத்தளை உரறுபுலி எனவிவை.

ஐந்தெழுத்தசைச்சீர் மூன்று; அவை: நரையுருமு புலிவருவாய் விரவுகொடி என வரும். இக்கூறப்பட்டனவெல்லாம் கண்டுக் காட்டுவனவாயிற்று,

> "எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
> குன்றலு மிகுதலு மில்லென மொழிப."
> (தொ. பொ. ௩௫௫)

என வருகின்ற சூத்திரத்தினை நோக்கியென்பது. 'மூடைமருது' என்பதனைக் குற்றுகரங் களைந்து ஐந்தெழுத்துச் சீரென்று காட்டுவாருமுளர். அஃது உரியசை மயக்கமாகிய ஆசிரியவுரிச்சீ ³ராகலின்,

1. சாதி—குலம்.
2. கொண்டாம் என்னும் பாடம் பொருத்தமின்று. இலேசு—சூத்திரத்துள் வரும் தான் என்பது.
3. ஆகலின் விலக்கப்பட்டது எனக் கூட்டுக.

"இன்பா நேரடிக் கொருங்குநிலை யிலவே." (௩௩௫)

என்பதனான் விலக்கப்பட்டதென்பது. இனி, [1] நுந்தையென் பதனை ஈரெழுத்துச் சீரென்பாருமுளர்; அங்ஙனங் கூறின்,

"இரண்டு தலையிட்ட முதலா கிருபஃது." (தொ. எழு. ௪௦௩)

என்னும் எழுத்தோத்திற்கு மாறுகொள்ளுமென்பது. அது வழக்கிற்குக் கூறியது; செய்யுட்காயின் அவ்வாறு கொள்ளாமோ வெனின்,—கொள்ளாம். செய்யுட்கண் ணுமதனை [2] வேறெழுத் தென்று வேண்டுமாகலின்; என்னை?

"முற்றிய லுகர மொழிசிதைத்துக் கொளாஅல்." (௩௨௧)

எனக் குற்றியலுகரமும் வருமொழியைச் சிதைத்துக் கொள் ளப்படாதென்பது கூறினாகலினென்பது. (௪௧)

[சமநிலை வஞ்சிக்கு ஆறெழுத்தானுஞ் சீர் வருமெனல்]

௩௫௪. நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்.

இஃது, ஒழிந்த வஞ்சிப்பாவினுள் வருஞ்சீர் இத்துணை யெழுத்து இறவாதென்கின்றது. நேர்நிலை வஞ்சியென்பது, சம நிலை வஞ்சி; அஃது இருசீரான் வருதலிற் சமநிலை வஞ்சி யெனப்பட்டது. முச்சீரான் வருவதனை வியநிலை வஞ்சி (௩௬௮) யென்பவாகலின்.

இ—ள்: இருசீரடி வஞ்சியுள் ஒருசீர் ஆறெழுத்தாகவும் பெறும் என்றவாறு.

இதற்கு, மேனின்ற அதிகாரத்தாற் பெருக்கத்திற்கு எல்லை கூறினான், சுருக்கத்திற்கும் வரையறையுடைமையின். அது முன் னர்ச் (358) [3] சொல்லுதும். எனவே, அறுபது வஞ்சியுரிச்சீ

1. நுந்தை என்பதை ஈரெழுத்தாகக் கொள்ளின் முதலில் நிற்குமெழுத்து இருபத்திரண்டு என எழுத்ததிகாரத்து விதித்த தனோடு மாறுபடும். எங்ஙனமெனின்? அதுவும் எண்ணப்பட்டு இருபத்துமூன்று ஆதல் வேண்டிவரும் ஆதலின். இதனாலேயே முதலில் வரும் எழுத்து இருபத்திரண்டு எனக் கூறப்பட்டது. ஆதலின் ஓரெழுத்துச் சீரெனப்படுமன்றி ஈரெழுத்துச் சீரெனப் படாது என்றபடி.

2 வேறு எழுத்து—முற்றுகரத்தின் வேறாய எழுத்து. என்றது குற்றுகரத்தை. முதலெழுத்தின் வேறாய எழுத்து எனினு மாம்.

3. சொல்லுதும்—சொல்லும் என்றிருத்தல்வேண்டும்.



ருள்ளும் ஆறெழுத்தான் வருஞ்சீருங் கட்டளையடியாய் வரப் பெறுமென்றவாறு. [1] உம்மை இறந்தது தழீஇயிற்று.

"தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே." (௩௫௮)

என்றதனான், ஒன்றும் இரண்டும் எழுத்தான் வருத லொழித்து ஒழிந்த எழுத்தால் ஆறெழுத்தளவும் வஞ்சியுரிச் சீர் வருமென்பது கொள்ளப்படும். இதனை எச்சவும்மையென்பார் எழுழுத்தானும் வஞ்சியுரிச்சீர் வருமென்ப; அங்ஙனங் கொள் ளின் இரண்டுசீராற் [2] பதினான்கெழுத்தளவாகிய செல்லும்; செல்லவே,

"குறளடி முதலா அளவடி காறும்
உறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப." (௩௬௬)

என்பதனொடு மாறுகொள்ளுமென்பது.

"தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே." (௩௫௮)

என்புழி இவற்றிற்கு உதாரணம் காட்டுதும். (௪௨)

[ஒருசீர் பல நிலைமை அடைதலரன், எழுத்தளவு மிகினும் குறையினும் ஓசையரல் தம்முள் ஒக்குமெனல்]

௩௫௫. எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலு மிகுதலு மில்லென மொழிப.

இது, மேற்கூறிய சீரெல்லாவற்றிற்கும் பொது விதி.

இ—ள்: ஒருசீர் இரண்டு முதற் [3] பதினெட்டீறாகப் பல நிலைமைப்பட்டுப் பல சீராகிச் செய்யுளுள் வருமாற்றான் தத்த மெழுத்துக் குறைந்தும் மிகுந்தும் அளவிறப்பினும் அவ்வச் சீரெனப்பட்டுச் செய்யுளுள் [4] ஒத்தவோசை [5] இருவகையும்

1. ஈக்கெழுத்தானன்றி ஆறும் என நின்றமையின் இறந் தது தழீஇயிற்று என்றார்.

2. பதினான்கெழுத்து அளவடிக்கு முடிபாயுள்ளது. அது கொள்ளின் அதுவரையும் வஞ்சி யுறழுமாதென்பதனோடு மாறு படும். என்னை? இச்சூத்திரத்தால் 12 எழுத்தடியே கூறலின், ஆதலிற் பொருந்தாதென்றபடி.

3. பதினெட்டீறாக என்பது எட்டீறாக என்றிருத்தல் வேண்டும். என்னை? இரண்டு நிலைமுதல் எட்டு நிலையீறாகவே சீர்கள்வேறுபடலின். இதுவே பொருத்தமென்பது வரும் விரி வுரையானறியப்படும்.

4. ஒத்தவோசையவாய் என்றிருப்பது நலம்.

5. இருவகை—மாத்திரை குறைந்தும் மிகுந்தும் வரு மிரு வகை. முறையே வண்டு மின்னு" என வருவனபோல்வன.

[1] ஒரு தன்மையவேயாகச் சுருங்கிற்றும் பெருகிற்றுமில்லை என்றவாறு.

எனவே, அவை எழுத்தெண்ணி அடிவகுக்குமாற்றான் இருநிலைமையும், இரண்டிறந்த பல நிலைமையும் படுவனபடும். அவ்விடத்து எழுத்தின்கண்ணது சுருக்கப் பெருக்கமில்லையென்பதாகக் கூறியவாறாயிற்று. 'நான்' என மிகுத்துச் சொல்லியவதனான், [2] அசைச்சீர்க்கும் அவ்வாறே கொள்ளப்படும். 'தளைவகைக் குறிய' என மேலோதிவந்த சீர் பதினாறும் அசைச்சீரிரண்டு மெனப் [3] பதினெட்டினுள்ளும் [4] இயற்சீர் பத்தினுட் புளிமாவும் வெண்சீர் நான்குமென ஐந்தும் ஒரு நிலைமையவேயாம். ஒழிந்தசீர் பதின்மூன்றும் இருநிலைமை யெய்தி இருபத்தாறும். ஆகச் சீர் முப்பத்தொன்றுமென்பது. அவற்றுக்குதாரணம்:

நுந்தை, தேமா; ஞாயிறு, பாதிரி; வலியது, கணவிரி; போதுபூ, மேவுசீர்; போரேறு, கன்னுழவு; பூமருது, காருருமு; கடியாறு, பெருநாணு; விறகுதீ, உருமுத்தீ; மழகளிறு, நரைபுருமு என ஒன்பதியற்சீரும் இருநிலைமையாற் பதினெட்டாயின. புளிமாவென்னும் இயற்சீர் ஒருநிலைமைத்தேயாம். [5] அல்லதார் [6] வரகு என்பதனுட் குற்றுகரங் களைந்து புளிமாவிற்கு இருநிலைமை காட்டுப; அங்ஙனங் காட்டின் வரவென்பதுபோலப்

1. ஒரு தன்மையவேயாம் என்றிருப்பது நலம்.

2. அசைச்சீர்—நேர்பு நிரைபு.

3. பதினெட்டினுள்ளும் என்றது,—இயற்சீர் நான்கு, நிரையீற்று ஆசிரிய உரிச்சீரிரண்டு, நேரீற்று ஆசிரியவுரிச்சீரிரண்டு, நேர்நிரை முதலாயும், நேர்புநிரைபு ஈறாயும் வந்த ஆசிரியவுரிச்சீர் நான்கு, அசைச்சீரிரண்டு, வெண்சீர் நான்கு ஆகப் பதினெட்டு.

4. இயற்சீர் பத்தாவன—இயற்சீர் நான்கும், நேர்புநிரைபு முதலாக வரும் நேரீற்று ஆசிரிய இயற்சீரிரண்டும், நேர்பும் நிரைபு மீறுகி நேரும் நிரையும் முதலாக வரும் ஆசிரிய இயற்சீர் நான்குமாகப் பத்தாம்.

5. அல்லதார்—பிறர்.

6. வரகு என்பதன்கண் குற்றுகரங் களைந்தால் ஒரு நிரையசையாம். புளிமா இரண்டசையாம். ஆதலால் புளிமாவிற்கு வரகு என்பதைக் காட்டி இருநிலைமை கோடல் பொருந்தாதென்பது. அதுபற்றியே வரகுக்கு அரவு இருநிலைமைக்கு உதாரணமாயிற்று. குற்றுகரத்திற்கு முற்றுகரம் ஒத்த ஓசையாதலின் இருநிலைமை கோடற்கு ஏற்குமென்பது கருத்து.



புளிமாவும் ஈரசையாகலானும், புளிமாவென்பதுபோல வரகு என்பது இரண்டசையாகவானும் கோடல்வேண்டும். கொள்ளவே இச்சூத்திரத்தினொடு மாறுகோளாமென்பது; என்னை?

"எழுத்தள வெஞ்சினுஞ் சீர்நிலை தானே
குன்றலும் மிகுதலும் இல்லென மொழிப." (௩௫௫)

என்றாகலின் என்பது.

நீடுகொடி நாணுத்தளை எனவும், உரறுபுலி விரவுகொடி எனவும் நிரையீற்றாசிரியவுரிச்சீரிரண்டும் இவ்விரண்டாகி இருநிலைமை யெய்தியவாறு.

இனி, வெண்சீர் நான்கும் ஒரு நிலைமையவேயாம்.

வண்டு, மின்னு, வரகு, அரவு என அசைச்சீரிரண்டும் நான்காய் இருநிலைமையவேயாம்.

இவ்வாற்றான் இவையெல்லாந் தொகுப்ப, இயற்சீர் பத்தொன்பதாம், ஆசிரியவுரிச்சீர் நான்கும், அசைச்சீர் நான்கும், வெண்சீர் நான்குமென முப்பத்தொன்றாயின. என்றார்க்கு,

'மாவருவாய், புலிவருவாய்'

என்பவற்றையும்,

[1] 'ஞாயிறுகொல், வலியதுகொல்'

எனக் குற்றுகரம்பெய்து இருநிலைமை கொள்ளாமோவெனில்,— கொள்ளாம்; அவை,

"எல்லா இறுதியு முகர நிறையும்" (தொ. எழு. ௪௦௪)

என்பதனான் முற்றுகரமாமென்பது. இனி, [2] முதற்கணின்ற குற்றுகரமுங் கொண்டு இருநிலைமை கொள்ளாம்; என்னை?

1. ஞாயிறுகொல், வலியதுகொல் என்பனவற்றில் குற்றுகரத்தை முற்றுகரமாகவே கோடலின், அவை மாவருவாய் புலிவருவாய் என்றே கொள்ளப்படும். ஆகலின் இருநிலைமை கோடல் வேண்டியதில்லை என்றபடி.

2. முதற்கணின்ற குற்றுகரம்—நுந்தை. இதுவும் நீ நுந்தை என்றவிடத்து வெண்சீர்க்கு(த் தேமாங்காய்க்கு)ப் பதிலாக வைத்து இருநிலைமை கொள்ளாம். என்னை? வந்துநின்றது என்பது இரு சொல்லாயினும் சீர்வகையான் ஒரு சொல்லாயினது போல — குற்றுகரம் முற்றுகரமாக வைக்கப்பட்டு அதுவுந் தேமாங்காய் ஆகவே கொள்ளப்படுதலின் தேமாங்காய்க்குப் பதிலாக வைத்து இருநிலைமை கொள்ளவேண்டியதில்லை என்றபடி. ஒருசொல்லாமாகவே என்றிருப்பது நலம். வேறு என்பது வேண்டியதில்லை.

தக்கையென்பது ஈரசையாகலானும் அதனை நீ தக்கையென வேறோர் சொற் பெய்து வெண்சீரெனக் காட்டின், அது 'வந்து நின்றது' என்றதுபோலச் சீர்வகையான் வேறோர் சொல்லாமாகவே அது முற்றுகரமாகலானுமென விடுக்க. என்றார்க்குப் [1] போதுபூ என்பதூஉம் இருநிலைமைத்தாகாதாம் பிறவெனின்,— அற்றன்று;

'சேற்றுக்கால், யாட்டுத்தாள், வட்டுப்போர்.'

எனப் பலவும் வருமாகலின் அஃது இருநிலைமைத்தேயாமென்பது. இனி வஞ்சியுரிச்சீர்க்கும் [2] இடைநின்ற குற்றுகரங்களை வன்றொடராக வருவித்துக்கொள்க. இனிச், [3] இறுதிக் குற்றுகரங்கள் நிரையாது நிற்றலும் உடையவென்பது,

"ஈரியைந் திற்றது சீரெனப் படுமே." (௩௨௪)

என்றவழிக் கூறியவாற்றானறிக.

இனிச் சூத்திரம் வரையாது கூறினமையின் [4] அறுபது வஞ்சியுரிச்சீருள்ளும் இருபத்துநான்குசீர் இருநிலைமையாகவும், இருபத்தெட்டுச்சீர் நான்கு நிலைமையாகவும், எட்டுச்சீர் எட்டு நிலைமையாகவுங் கொள்ளப்படும். அவற்றுள்,

இருநிலைமைப்படுவன நேரீற்றுச்சீ ரெட்டு, நிரையீற்றுச்சீ ரெட்டு, நேர்பீற்றுச்சீர் நான்கு, நிரைபீற்றுச்சீர் நான்கு என இருபத்துநான்கு வஞ்சியுரிச்சீராம். அவை :—[5] மாபோகுவாய் மாவழங்குவாய் பாம்புசேர்வாய் பாம்புவருவாய், புலிபோகுவாய் புலிவருவாய் களிறுசேர்வாய் களிறுவருவாய் எனவும், [1] மாசேர்சுரம் மாவருசுரம் மாபோகுசுரம் மாவழங்குசுரம், புலிசேர்சுரம் புலிவருசுரம் புலிபோகுசுரம் புலிவழங்குசுரம் எனவும், [2] மாசேர்காடு மாவருகாடு புலிசேர்காடு புலிவருகாடு எனவும், [3] மாசேர்கடறு மாவருகடறு புலிசேர்கடறு புலிவருகடறு எனவும் வரும்.

1. போதுபூவையும் நேர்நிரையாக வைக்கின் இருநிலைமை யடையாதாமெனின் சேற்றுக்கால் முதலியன போதுபூப்போல வாராது குற்றுகரம் பிரிந்து வருதலின் நேர்பு நேராகவே கொள்ளப்படுதலின் அவைபோலப் போதுபூவும் இருநிலைமை யடையும் என்றபடி.

2. இடைநின்ற குற்றுகரம் என்றது வஞ்சியுரிச்சீரில் மாபோகுவாய் என்பதுபோல வருவனவற்றிலுள்ள போகு என்பதுபோல்வன. அவற்றையும் யாட்டுத்தாள் என்பதுபோல வன்றொடராக வருவிப்பின் ஓசை பிளந்து காட்டும் என்றபடி.

3. இறுதிக் குற்றுகரமென்றது சார்ந்து, வரகு என்பன போலும் அசைச்சீராய் வருவனவற்றி னிறுதிக் குற்றுகரத்தை. இவை முற்றுகரமாக நில்லாது என்றபடி.

4. அறுபது வஞ்சியுரிச்சீர் என்றது வெண்சீர் நான்கையும் நீக்கி.

5. இவை நேரீற்றுச்சீர் எட்டுக்கும் உதாரணம்.



இவ்விருபத்துநான்கும் [4] இருநிலைமையான் நாற்பத்தெட்டாமென்பது.

இனி, நான்கு நிலைமைப்படுஞ்சீர் இருபத்தெட்டும் வருமாறு :

பாம்புபோகுவாய் பாம்புவழங்குவாய் களிறுபோகுவாய் களிறுவழங்குவாய் எனவும், பாம்புசேர்சுரம் பாம்புவருசுரம் பாம்புபோகுசுரம் பாம்புவழங்குசுரம் எனவும், களிறுசேர்சுரம் களிறுவருசுரம் களிறுபோகுசுரம் களிறுவழங்குசுரம் எனவும், மாபோகுகாடு மாவழங்குகாடு புலிபோகுகாடு புலிவழங்குகாடு எனவும், பாம்புசேர்காடு பாம்புவருகாடு களிறுசேர்காடு களிறுவருகாடு எனவும், மாபோகுகடறு மாவழங்குகடறு புலிபோகுகடறு புலிவழங்குகடறு எனவும், பாம்புசேர்கடறு பாம்புவருகடறு களிறுசேர்கடறு களிறுவருகடறு எனவும் வரும். இவற்றை,

'பாம்புபோகுவாய், பாம்புமன்னுவாய்,
மின்னுப்போகுவாய், மின்னுக்கோலுவாய்.'

எனா, ஒன்று நான்காக வாய்பாடு கொடுத்து ஓட்டியுணர்க.

இவற்றுள், உரியசை முதற்கணின்ற நிரையீற்று நான்கனையும் ஒன்று நான்கு செய்யுங்கால்,

'பாம்புசேர்சுரம், பாம்புசேர்வது.
மின்னுச்சேர்சுரம், மின்னுச்சேர்வது.'

என்றாற்போல வெவ்வேறு வாய்பாடு கொடுத்துரைக்க. இவையிருபத்தெட்டும் விரிப்ப நூற்றிருபத்திரண்டு வஞ்சியுரிச்சீராம்.

1. இவை நிரையீற்றுச்சீர் எட்டுக்கும் உதாரணம்.

2. நேர்பீற்றுச்சீர் நான்கற்கும் உதாரணம்.

3. நிரைபீற்றுச்சீர் நான்கற்கும் உதாரணம்.

4. இருநிலைமை யடைதற்குக் குற்றுகர அசைகளுக்கு முற்றுகர அசைகளைப் பெய்து காண்க; மாபோகுவாய்=மாமன்னுவாய் என்பதுபோல.

நாம். அவற்றுள், ஆறெழுத்துச் சீரொன்றும் ஒழித்து, ஒழிந்த வஞ்சியுரிச்சீரேழும் உறழ்நிலையில வஞ்சிக்கெனப்பட்டன; அவை:

கனிறுவழங்குசுரவு, கனிறுவிரவுகடறு, அரவுவழங்குகடறு என மூன்றும் ஏழெழுத்துச்சீர்.

கனிறுவிரவுசுரவு, அரவுவழங்குசுரவு, அரவுவிரவுகடறு என மூன்றும் எட்டெழுத்துச்சீர்.

அரவுவிரவுசுரவு என்பது ஒன்பதெழுத்துச்சீர்; இவையெல்லாந் தொகுப்ப [1] ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றும் [2] எட்டெழுத்துச்சீ ரொன்பதும் [3] ஒன்பதெழுத்துச்சீ ரொன்றும் ஒழித்து, ஒழிந்த வஞ்சியுரிச்சீர் நூற்றெண்பத்தொன்றும் உறழ்நிலையுடையவெனக் கொள்க.

ஏழெழுத்துச்சீரும் எட்டெழுத்துச்சீரும் ஒன்பதெழுத்துச் சீரும் அடியுறழ்வனவாக்கி மேன் மூன்றுசீரானும் மூன்று நிலனேற்றிப் பதினேழெழுத்தடியளவும் உறழும் வஞ்சியடி என்பாருமுளர். அங்ஙனம் ஒன்பதெழுத்துச்சீர் இரண்டுவந்த குறளடி பதினெட்டெழுத்தடியாகலின், [4] வஞ்சியிலும் பதின்மூன்றாகல் வேண்டும், ஓசை நோக்காது சீர்நோக்கி உறழ்ச்சி கொள்ளினென மறுக்க.

அவை அளவடியோடு ஒத்த சிறப்பினவன்மையானும், அவற்றுக்குத் தளைவரையின்மையானும் எடுத்தோதித் தொகை கூறிற்றிலனாயினும், நாம் அவற்றை எண்ணி உணர்ந்து கூறுங்

1. ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றுவன :—

| | | | | |
|---|---|---|---|---|
| 15 சீருமுறழ்ந்ததனால் | வந்த | ஏழெழுத்துச்சீர் | | 15 |
| 8 | " | " | " | 6 |
| 3 | " | " | " | 9 |
| 1 | " | " | " | 3 |
| ஆக | | | | 33 |

| | |
|---|---|
| 2. எட்டெழுத்துச்சீர் | 9 |
| 3. ஒன்பதெழுத்துச்சீர் | 1 |
| ஆக | 43 |

இவை அடி உறழாதன.

வஞ்சியுரிச்சீர் 224-ல் 43 கழிக்க 181-ம் உறழ்வனவாம்.

4. 12-க்குமேல் 18 எழுத்தடி கொள்ளின் 6 நிலம் கூடும். கூடவே 7 நிலமும் 6 நிலமுமாகப் 13 நிலம் வரும் என்றபடி.



கால் [1] ஒருசீர்க்கு அடி நான்காக வஞ்சியடி எழுநூற்றிருபத்து நான்காமெனக் கொள்க. அவையுறழுங்கால் மூன்றெழுத்துச்சீர் ஆறாகி ஒன்பது உயர்வும், நாலெழுத்துச்சீர் ஏழாகி பத்தெழுத் துயர்வும், ஐயெழுத்துச்சீர் எட்டாகி பதினொன்றுயர்வும், ஆறெழுத்துச்சீர் ஒன்பதுமுதல் பன்னிரண்டுயர்வும்பெற்று நின்ற சீரோடு மூன்றெழுத்துச்சீரும் நாலெழுத்துச்சீரும் ஐயெழுத்துச் சீரும் ஆறெழுத்துச்சீருந் தந்துறழ்கவென்பது. அவை:

"கலக்காய்ந்தது காம்புநீடி."

என்பது ஆறெழுத்தடி.

"நல்கூர்ந்தது வில்லோர்கரம்."

என்பது ஏழெழுத்தடி.

"வான்பெய்தது மண்குளிர்ப்புற."

என்பது எட்டெழுத்தடி.

"தேன்பெய்தது செழுநகர்தொறும்."

என்பது ஒன்பதெழுத்தடி.

இவை மூவெழுத்து மாசெல்காடு நின்றுறழ்ந்த நான்கடியும் வந்தவாறு. ஒழிந்தனவும் அன்ன.

"மண்மாய்ந்தென வுள்வீழ்ந்தது."

என்பது ஏழெழுத்தடி.

"விண்பாய்ந்தென மேற்செறுத்தது."

என்பது எட்டெழுத்தடி.

"காடோங்கிய கல்செழுசுரம்."

என்பது ஒன்பதெழுத்தடி.

"கோடோங்கிய குறும்பொறைமருங்கு."

என்பது பத்தெழுத்தடி.

இவை நான்கடியும் நாலெழுத்து மாசெல்சுரம் நின்றுறழ்ந்த அடி.

"மழைபெய்தென வான்வெள்ளென்று."

என்பது எட்டெழுத்தடி.

"தழைபச்செறுத் தண்ணென்காவு."

என்பது ஒன்பதெழுத்தடி.

1. வஞ்சிச்சீரில் அடிக்குரிய 181 ஐயும் 4 அடியாற் பெருக்க 724 அடி காண்க.

"காமர் பூந்துணர் கள்ளவிழ்தொறும்."

என்பது பதின்மூன்றெழுத்தடி.

"இமிழ்தாங்கிசை நிசைசுரும்புவா."

என்பது பதினோரெழுத்தடி.

இவை நான்கும் ஐயெழுத்துப் புலிசேர்சுரம் ஒன்றுதாழ்ந்த அடி.

இனி, [1] ஆறெழுத்துப் புலிவருசுரம் ஒன்பதெழுத்து முதல் பன்னிரண்டளவும் உயர மற்றவைபோல நான்கடி பெறும்.

"அமைவிடுகோடி யஞ்செயோர்ந்து."

என்பது ஒன்பதெழுத்தடி.

"கனைகுரலன காணத்தனகு."

என்பது பத்தெழுத்தடி.

"இணைப்புளத்தித வையத்தியாது."

என்பது பதினோரெழுத்தடி.

"மனக்குறமகள் கடைப்புறத்தரும்."

என்பது பன்னிரண்டெழுத்தடி.

இவ்வாறே ஒழிந்தனவும் உறழ்ந்துகொள்க.

மூன்று பாவின் றுணைச் சிறப்பின்மையின் வஞ்சியடி ஈண்டுப் போதந்து கூறினனென்பது. ஒழிந்த [2] முச்சீரடி சிறுவரவிற்றாகலின் அதற்குக் கூறியதிலனென்பது. (௫௭)

[வெண்பாவுக்குரிய நிலம் இவையெனல்]

௩௯௦. அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய
தளைவகை யொன்றாத் தன்மை யான.

இஃது, ஆசிரியவடிக்கும் அதன் நடைத்தாகிய வஞ்சியடிக்கும் உரிய நிலங்கூறி வெண்பாவிற்குரிய நிலங் கூறுகின்றது.

1. ஆறெழுத்துப் புலிவருசுரம் என்பது எழுதுவோரால் விடப்பட்டுப்போயது.

2. முச்சீரடி வஞ்சிக்குரியது.



இ—ள்: அளவடி ஐந்துஞ் சிந்தடி மூன்றுமென எட்டு நிலம்பெறுந் தளைவிரவாமையாற் வெண்பாவடி என்றவாறு.

அளவடி முற்கூறியதென்னையெனின், — [1] மேல் நிறுத்த முறையாற் கொள்ளாது [2] ஈண்டுச் சொல்லும் முறையாற் கூறினனென்பது.

"நின்று நினைந்து நெடிது பெயர்ந்து."

என்பது எழெழுத்தடி.

"அறிவறிந்தார்த் தேற்றியக்கா லஞ்சுவ தில்லை."

என்பது பதினொன்றெழுத்தடி.

[3] இதனும்பர் நெடிலடியாலும் வெண்பாவடி வருவன உள. அவை கட்டளையடியெனப்படா, [4] செப்பிக் கூறும் பாவாகாது செய்கை தோன்றியே நிற்குமாகலினென்பது; பிறிது காரணம் உண்டாயினும் அறிந்துகொள்க. தளைவகை ஒன்றாமையென்பது வெண்பாவும் வெண்பா நடைத்தாகிய கலிப்பாவும் மயங்காமை காரணத்தானென்றவாறு. கலியோசை மயங்கி வருவனவும் வெண்பாவடியுளவா. அவை [5] நெடிலடி மூன்றுனும் வருமெனக் கொள்க. ஓரோவடியே வெண்பாவடியுமாய்த் தன்னிக் கலியடியுமாகித் தளைவகை ஒன்றுமாகலான் அம்பயர்க்கு நீராதேனை,

"அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய."

என்றுமென்பது.

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்."

என்றக்கால் இதனை,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி." (௩௨௩)

என்றதனாற் கலியோசை பிறப்பவுஞ் சொல்லிக் கண்டுகொள்க.

1. மேல் நிறுத்தமுறை என்றது ௩௪௩-ம், ௩௫௦-ம் சூத்திரங்களில் நிறுத்தமுறைமை.

2. ஈண்டுச் சொல்லுமுறை என்றது அளவடிக்கே நிலங் கூறுமுறை.

3. இதனும்பர்—௧௪ எழுத்தடியின்மேல்.

4. செப்பிக் கூறும் பாவாகாது செய்கை தோன்றியே நிற்கும் என்பது வெண்பாவாகாது வெண்பாவின் செய்கை தோன்றிய மாத்திரையே நிற்கும் என்றபடி.

5. நெடிலடி மூன்றுவன—15 எழுத்தடியும் 16 எழுத்தடியும் 17 எழுத்தடியும் என்பன.

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்
மாவருவாய் தேமா வரகு."

என்றிதனையே ஓசையூட்ட வெண்பாவாயிற்று. இது,

"மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாந்தினரே."

எனக் கலியோசையாயினவாறறிக. (௩௮)

[கலிப்பாவிற்குரிய நிலம் இவை எனல்]

௧௭௧. அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி
இருநெடி லடியுங் கலியிற் குரிய.

இது, முறையானே கலிக்குரிய நிலமுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: ஐவகையடியினும் அளவடி மிகுதியாகிய பதின்மூன்றெழுத்தும் பதினான்கெழுத்தும் நெடிலடியும் கழிநெடிலடியுங் கலியடிக்குரிய என்றவாறு.

எனவே, அதுவுந் தன் முதற்பாவாகிய வெண்பாப்போல எட்டுநிலம் பெறுவதாயிற்று. ஒழிந்த அடி மூன்றனோடும் ஒவ்வாது மிக்க நிலம் இரண்டனையும் மிகுதியென்றானென்பது. இனி,

"ஒத்த நாலெழுத் தேற்றலங் கடையே." (௧௫௦)

என்பதே கொண்டு பதினேழெழுத்தடிமுதல் நான்கு நிலனும் அளவடி மிகுதியெனப்படும் எனவும், அவை கலிக்குரிய எனவுங் கொள்வாருமுளர்; அங்ஙனங் கொள்வார்க்கு,

[1] "ஞாயிறு கடியாறு கடியாறு கடியாறு."

என்றதனைப் பதினேழெழுத்தடியென்று காட்டல்வேண்டும்; அஃது ஆசிரியவடியாம்; ஆகலான், அற்றன்றென்பது. இனி,

"ஞாயிறு மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய்."

என்பதோவெனின்,—அது கலிப்பாவோடு தளைவகையொன்றிய வெண்பாவடியாகலானும், நிரைமுதல் வெண்சீர் வந்து நிரை தட்பினன்றி ஞாயிறு என நின்ற நிரையீற்று இயற்சீர்ப்பின்னர் நேர்வந்தாற் கலித்தளையாகாது வெண்டளையாமாகலானுங் கட்டளையடிக்கு அவ்வாறு கோடல் குற்றமென்பது. அல்லதூஉம், கலிப்பாவிற்குப் பத்துநிலங் கொள்ளிற் கட்டளையடி அறுநாற் றிருபத்தைந்தன்றிப் பல்குமென்பது. (௩௯)

1. ஞாயிறு கடியாறு என்னுமடி இயற்சீரான் வந்த ஆசிரியவடி.



[நிரையீற்றுஇயற்சீர்மூன்றும் நிரையீற்றாசிரியவுரிச்சீர் மூன்றும் நிரைமுதல் வெண்சீர் வந்து தட்பினும் கலித்தளையாமெனல்]

௧௭௨. நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை தட்பினும்
வரைநிலை யின்றே யவ்வடிக் கென்ப.

இதுவும், கலித்தளை விகற்பங் கூறுகின்றது.

இ—ள்: நிரையீற்று இயற்சீரும் நிரையீற்று ஆசிரியவுரிச்சீரும் நிற்ப நிரைமுதல் வெண்சீர் வந்து நிரையொன்றியக் காலுங் கலித்தளையாம் என்றவாறு.

"மணிபுரை திருமார்பின் மறந்துயங்கத் தோன்றுங்கால்."

என்புழி, 'திருமார்பின்' என நிரைமுதல் வெண்சீர் வந்து 'மணிபுரை' என்னுஞ்சீர் இறுதி நிரையொடு தட்டுக் கலித்தளையாயிற்று. எனவே, நிரைமுதல் இயற்சீர் வந்து நிரைதட்பினும், நேர்முதல் வெண்சீர் வந்து ஒன்றுதொடுப்பினும், அது கட்டளைவகையாற் கலியடியாகாதென்றவாறு; என்னை? தளைவிகற்பின் அந்தந்த இயற்சீர்ப்பின் நிரைமுதல் வெண்சீர் வந்து தளைகொள்ளல் வேண்டுமாதலானும், 'ஞாயிறு மாசேர்வாய்' என்பது வெண்பாவடியுமாம் ஆகலானுமென்பது. 'அடிக்கென்ப' என்றதனான் [1] இதுவுங் கட்டளையடிக்கேயென்பது கொள்க. மற்று நிரைமுதல் வெண்சீர் வருவது முதனின்ற இயற்சீர்ப்பின்னர் இடைநின்ற இயற்சீர்ப்பின்னரோவென்பது அறியுமாறென்னையெனின்,—அங்ஙனம் வரையாது கூறினமையின் முதற்கண்ணதே இவ்விதியென்பதாம். அல்லதூஉம் அவ்வாறு இயற்சீரினை இடையும் வருமென்று கொள்ளிற் பதின்மூன்றெழுத்திற் சுருங்கிய நிலனும் அது பெறுவான் செல்லும். செல்லவே கலியோசை இனிது பெறலாகாவென மறுக்க. என்றார்க்குப் பின்வருஞ்சீர் மூன்றும் நிரைமுதல் வெண்சீர் வருவதென்றிலனாகலின் மூன்றுஞ்சீர் நேர்முதல் வெண்சீர் [2] வந்தும்,

1. இதுவும்—இச்சூத்திரமும்.

2. வந்தும் என்றதன்பின் சில சொற்கள் தவறினபோலும். "ஞாயிறு வந்தும் அது கட்டளையடியன்றென்பது என இயைக்க. "ஞாயிறு புலிவருவாய் மாவருவாய் புலிவருவாய்" என்பது மூன்றுஞ் சீர் வெண்சீர் வந்ததற்குதாரணம். இது கட்டளையடியன்று.

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே" (க.சக)

என்றதனானும் [1] இடைநிற்பன வெண்சீரென்பது பெறுதுமாக லானும் அது கட்டளையடியன்றென்பது. இனி, முதனின்றது நிரையீற்றியற்சீராகலான் அள்ளலோசை பிறவாமையின் அசைச் சீர்ச் சேர்க்கை குறைநீரக் கலித்தளை பயவாது வரல்வேண்டுமென்பது. இவ்வாற்றான் ஓசைச் சுருக்கப் பெருக்கம் உணர்தற்கு அருமை நோக்கி,

"அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தனர் குணர்த்தலான் வல்லோ ராறே." (ந.உந)

என்பானுமிற்றெனவுணர்க. இக்கருத்தினானன்றே நிரைமுதல் வெண்சீர் வருதலெனவும் நிரையீற்று இயற்சீர்ப்பின்னர் மாசெல் லாப் பூன்று வரினுஞ் சிறிது கலியோசை பிறக்குமாயினும் அதனைக் கட்டளையடியென வோகானுமிற்றுமென்பது. (சுo)

[சீர்வகையான் வருங் கலியடி தளை விரவியும் வருமெனல்]

கஎசு. விராஅய தளையு மொருஉநிலை யின்றே.

இது, சீர்வகையான் வருங் கலியடி தளைவிரவினுங் கடியுப் படாதென்கின்றது; யாதனோடு விரவியோவெனின்,—[2]வெண் பாவினோடு விராய்த் தட்பினுமென்றவாறு; என்னை?

"தளைவகை யொன்றுத் தன்மை யான." (கஎo)

என வெண்பாவிற்குங் கூறினமையின்.

இ—ள்: வெண்சீர் ஒன்றி வருதலுங் கடியப்படா கலிக்கு என்றவாறு.

'சீர்வகையடிக்கண்' என்பது, என்னை பெறுமாறெனின்,— 'விராஅயதளை' என்றமையாற் பெறுதுமென்பது; உதாரணம்:

"தளைவகை யொன்றுத் தன்மை யான." (கஎo)

என்புழிக் காட்டப்பட்டது. (சுக)

1. இடை நிற்பன நிரைமுதல் வெண்சீர் என்பது பெறுது மாகலானும் என்றிருத்தல்வேண்டும்.

2. இதற்கு ஆசிரியத்தளையோடும் வெண்டளையோடும் விராய் என்பர் இளம்பூரணர். நச்சினார்க்கினியரும் அவ்வாறே கொள்வர்.



[கட்டளையடியல்லாதவழி ஆசிரியப்பாவினுள் இயற்சீர் வெள்ளடியும் வருமெனல்]

சுஉ. இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி
னிலைக்குரி மரபி னிற்கவும் பெறுமே.

இது, வெண்சீரொன்றிவரும் அடி கலிப்பாவிற்கும் உரித் தென்ற முறைமையானே, இயற்சீர் வெள்ளடியான் வரும் அடி ஆசிரியத்திற்கு மயங்கியல்வகையான் நிலைக்குரித்தாகி நிற்கவும் பெறுமென்கின்றது.

இ—ள்: அம் மயங்கியல்வகைதான் அப்பாவிற்கு உரிமை யுடைத்திற்கும்; ஆசிரிய அடியோடு கூடிய கூட்டத்துக்கண் என்றவாறு.

வெண்பாவினுளாயின் ஆசிரியவடி முழுவதுந் தன்றளை யொடு வாராது; என்னை?

"தூடத் தீம்புகை தொல்விசும்பு போர்த்ததுகொல்
பாஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொல்
மாஅ மிசையான்கொ லன்ன வறுநுதலை
மாஅமை யெல்லாம் பசப்பு." (மலைபடுகடாம்)

என்பதன் முதலடியுள்ளே 'தூடத்தீம்புகை' என ஓர் ஆசிரி யத் தளைவர, மற்றையன வெண்டளையாகி வந்தமையின். அற் றன்றி முழுவதூஉம் ஆசிரியத்தளை வரின் வெண்பா சிதையு மாகலின் இதனையே [2]சொல்லின் முடிவிலக்கணத்தான் வெண்பா யென்றான்; எனவே, [3]வேற்றோசை விராயவழித் தன்றோசை திரிதல் இதற்குப் பெரும்பான்மையாயிற்று; ஆசிரியமாயின் அவ்வாறு அழியாதென்பது கருத்து. என்போலவோவெனின்,—

1. தூடத்தீம்புகை என்பதை நேரும் நேருமொன்றிய ஆசிரி யத்தளை என்று இவர் கொண்டதற்குக் காரணம் — அள பெடையை ஓரெழுத்து நிறுத்து ஓரசை கொண்டமையே. 'தூஉட' என இன்னும் ஓரெழுத்து நிறுத்து சரளபு கொண் டால் வெண்டளையாம். அவ்வாறு கொள்வர் நச்சினார்க்கினியர்.

2. வெண்பாவென்ற சொல்லானே 'வெண்டளைப்பா' என விலக்கணந் தோன்ற நின்றதென்றபடி.

3. வெண்பாவிற்குரிய செப்பலோசை வேற்றோசை விராய வழித் தன்றோசையழியும். ஏனைய ஆசிரியப்பா வெண்பாவோசை விரவினும் தன்றோசையழியா. என்போல எனின் பளிங்குடன் சேருங்கால் பளிங்கு வேறுபடும். பஞ்சு வேறுபடாது. அதுபோல என்பது கருத்து. வேற்றோசை எனவும் பாடம்.

பளிங்குடன் அடுத்த பஞ்சி வேற்றுமையால், பளிங்கு வேறு படுமல்லது பஞ்சி வேறுபடாததுபோலவென்பது. இதனுள்ளே வெள்ளையென்பது ஒப்பினான் ஆகிய பெயரென்பதூஉம் பெற்றாம்.

"எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
வுலைக்கல் லன்ன பாறை யேறிக்
கொடுவி லெயினர் பகழி மாய்க்கும்." (குறுந். ௧௨.)

இவ்வாசிரியத்துள், எல்லாவடியும் பா வேறுபட்டு இசை யாமையின் முதற்கணின்ற இயற்சீர் வெள்ளடி நிலைக்குரி மர பின் நின்றதாயிற்று.

"கொலைதவிர் கோட்டுவன் கோள்வேட் டெழுந்த
புகர்முக யானை முதன்மீ தழுத்திய
செங்கோற் கொடுங்கணை போதுமெனுஅ
நெஞ்சங் கவர்ந்தோ ளிடைமிகுந்தக் கண்ணே."

என்பது, செய்யுள் முழுவதூஉம் இயற்சீர் வெள்ளடியான் வந்தது.

மற்று, இயற்சீர் வெள்ளடியல்லது பிறவடி ஆசிரியத்துள் மயங்கப்பெறாதோவெனின்,—அது [1] நிலைக்குரி மரபின் நில்லா மையின் உம்மையால் தழீஇக்கொள்ளப்படுஞ் சிறுபான்மை யென்பது.

[2] "பாஅல் புளிப்பினும் பகலிருளினும்." (புறம். ௨)
என்றாற்போல்வன.

"மாவாழ்ங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது." (யா. வி. ௩0)
என்னும் ஆசிரியவடியினைக் கலிப்பா மயங்கிற்றென்பாரும் உளர். அது துள்ளச்செல்லுங்கால் [3] அளபெடுக்கவேண்டுமெனக் கூறி மறுக்க. (௯௨)

[கலிப்பாவினுள் ஐஞ்சீரடியும் வருமெனல்]

௧௭௫. வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு
மைஞ்சீ ரடியு முளவென மொழிப.

இஃது, ஐஞ்சீரடியும் வருமாறு கூறுகின்றது.

இ—ள்: மேனின்ற அதிகாரத்தாற் கலிப்பாவிற்கு ஐஞ்சீ ரடியும் உள என்றவாறு.

1. நிலைக்குரி மரபின் என்றது நிற்றற்குரிய மரபினை. என் றது பா வேறுபட்டு இசையாமையை.

2. இது வஞ்சியடி.

3. காட்டு—காஅட்டு எனவும், காணாது என்பது காணாஅது எனவும் அளபெடுக்கவேண்டும் என்றபடி.



"வெண்டளை விரவியு மாசிரியம் விரவியும்."

என்றது என்னையெனின்,—அவ்வைஞ்சீரடி வெண்பாவோடு விராயும் ஆசிரியப்பாவோடு விராயும் வருமென்றவாறு. ஈண் டுத் தளையென்றது அப் [1] பாக்களையாதலான் அப்பாக்களோடு விரவுமெனவே அப்பாக்களை உறுப்பாகவுடைய [2] பிற செய்யுட் கண்ணும் அவ்வைஞ்சீரடி வருமென்பது பெற்றாம். வெண்டளை யொடு விரவுமெனவே ஐஞ்சீரடி [3] அவற்றுக்கு உரியவல்லவென் பதாம்; எனவே, கலிப்பாவின்கண் வரும் ஐஞ்சீரடியாயின் அக் கலியோசைக்கு உரிமையுடைத்தென்பதாம்.

'உள' எனவே, ஐஞ்சீரடி கலிப்பாவுட் பயின்று வருமென்ப தூஉம், அல்லனவற்றுட் பயிலாவெனவும் கொள்க.

[4] "விராய தளைய வொருஉறிகம் பின்று." (௧௭௧)

எனப்பட்ட கலிப்பாவினோடு இயைபுபட்ட வெண்பாவடியும், அதனோடு இயைபுபட்ட ஆசிரியவடியுங் கூறி, அம்மூன்றனை யும் உடன் கூறினமையானும், ஆண்டுச் சிறந்தவாறே ஈண்டும் அவ்வதிகாரத்ததாகக் காட்டி, ஐஞ்சீரடியும் உளவென்று ஆண்டு நின்ற கலிக்குக் [5] கூறிய அவ்வடி, வெண்டளை விரவியும் ஆசிரி யம் விரவியும் வருமெனப் பிறவற்றுக்குங் கூறினானென்பது.

1 பா—ஓசை.

2. பிற செய்யுள்—வெண்பாவும் ஆசிரியப்பாவும்.

3. அவற்றுக்கு—அவ்வெண்பாக்களுக்கு.

4. விராயதளை (௧௭௧) என்பதற்கு வெண்பாவோடு விராய தளையென்று பொருள்கூறி, வெண்சீர் ஒன்றிவருவதும் கலிப்பா விற்கு வருமென்று முன் கூறியபடியே ஈண்டுங் கலிப்பாவோடு இயைபுபட்ட வெண்பாவடியும் என்றும், ௧௭௧-ம் சூத்திரத்து வெண்பாவடி ஆசிரியவடியுள் மயங்கி வருமென்று கூறியபடியே ஈண்டும் அதனோடு (வெண்பாவோடு) இயைபுபட்ட ஆசிரியவடி யுங் கூறி என்றுங் கூறினார். அம்மூன்றனையும் உடன் கூறுதல் என்றது, அவ்விரண்டு சூத்திரத்தையும் உடன்வைத்து கலியை யும் வெண்பாவையும் ஆசிரியத்தையும் ஒருங்கு கூறுதலை. ஆண் டுச் சிறந்தவாறு என்றது, அச்சூத்திரத்து எப்படிக் கலி சிறந் ததோ—அவ்வாறே ஈண்டும் சிறந்ததாகக்கொண்டு என்றபடி. அவ்வதிகாரமென்றது கலியதிகாரப்பட்டு நின்றமையை.

5. கூறிய—கூறி என்றிருக்கவேண்டும்; இச்சூத்திரத்தானே கலிக்கும் விதித்தலின்.

"தொக்குத் துறைபடியுந் தொண்டையஞ்செவ் வாய்மகளிர்
தோண்மேற் பெய்மாலை
கைக்கொண்ட நீருட் கருங்கண் பிறழ்வ
கயலென் றெண்ணி
மெய்க்கண்ணும் பெய்கலைச் சீண்டுகலைக் கேசொர்ந்து
மினிர்வ காணு
செக்கர் மலர்ந்திலக்கு மேழை மகளிர்க்கே
வெறிநீர்க் கொற்கை."

எனச் செய்யுள் முழுவதும் அறுசீரடியே வந்தது.

"வரைபுரை திரைபோழ்ந்து மனதனு
நறுநுதல் பொருட்டு வந்தோய்."

எனா ஆசிரியத்தளையானும் அறுசீரடி வந்தது.

மற்றுந் தளைகொண்டுருவது கட்டளையடிக்கென்றீரால், [1] ஈண்டுத் தளைகொண்டதென்னையெனின்,—அவ்வரையானை ஒருவன் சொல்லுவது : அறுசீரடி வருங்கால் முதற்கண் [2] நேரடி தூங்கிப் பின் இருசீரோடு தொடுத்தல்வேண்டும் என்னும். அஃது [3] இச்சூத்திரத்திற்கு ஏலாது ; நேரடிமுன் அறுசீர் வரினென்பது பதின்சீரடியாமாகலின் ; அல்லதூஉம், குறளடி தூங்கியுஞ் சிந்தடி தூங்கியும் அறுசீரடி வருதலின் அஃது அமையா தென்பது, என்னை ?

[4] "வாராது நீத்தகன்றார்
வருமாறு பார்த்திருந்தார்
வடிக்கண் போல."

என்றவழி, இருசீரான் யாத்தமையின் அது தூக்கெனப் படாது.

---

1. ஈண்டு—இவ்வாக்கியத்தில் வரும் வினாவிற்கு விடை காணுமையின் இவ்விடம் தப்பியதோவென்று ஐயம் உண்டாகின்றது. அல்லது ஆசிரியத்தளையானும் தனியே வருமென்று இவர் உதாரணங் காட்டியிருத்தலின் அதுவே விடையாக உய்த்துணர வைத்து இதனால் பிறர் கருத்தைக் கூறியிருத்தல்வேண்டும்.

2. நேரடி நாற்சீரடி.

3. இச்சூத்திரத்திற்கேலாது என்றது, நேரடிமுன் இருசீரடி என்று சூத்திரஞ் செய்யாது 'அறுசீரடியே' என்று சூத்திரஞ் செய்தமையின் ஏலாது. அன்றியும் நேரடிமுன் அறுசீரடி வரின் என்று கொள்ளவேண்டும். கொள்ளின் அது பதின்சீரடியாமாகலின், அதனானும் பொருந்தாது என்றபடி.

4. இது குறளடி தூங்கியதற்குதாரணம்.



[1] "செங்காந்தள் கைகாட்டுங் காலைத்
தேட்சென்றார் வாராக்கொல் பாவம்."

...ன முச்சீரான் யாத்தமையின் அதுவுந் தூக்கெனப்படாது ; அறுசீரடியே தூக்கெனக் கொண்டமையின், நேரடிமுன் இரு சீரடி வந்ததென்றதூஉம் பிழைக்குமென்பது. (௯௪)

[...லிப்பாவினுள் முடுகியல்பெற்று எழுசீரடியும் வருமெனல்]

௭௭. எழுசீ ரடியே முடுகிய னடக்கும்

இஃது, எழுசீரான் வரும் அடி கூறுகின்றது.

இ—ள் : எழுசீரான் [2] வருமவையும் அடியுள, அவை பயின்று ...ப்பது முடுகியற்கண் என்றவாறு.

எனவே, முடுகாதவழி அத்துணை நடையாட்டம் இல ...ழுசீரடி என்பதாம். பாவினொன்றும் உதாப்பு இடனுகும். ...ாரம், பிறிதே.

"நாகரு முழிசெதி நடமனி விடையிடை
தழுவென விரிவன பொழில்."

...னவும்,

"கவிதழ் கதுவிய நுவரித நுனியைவயர்
கவிமயிற் கணந்தொடு விளையாட."

...ன எழுசீரடி முடுகிவந்தது. இவை பரிபாடலுள்ளுங் கலி ...ள்ளுங் காணப்படும். முடுகாது வரும் எழுசீரடி வந்தவழிக் ...ண்டுகொள்க. (௯௫)

[கலிக்கண் வருமென முற்கூறிய ஐஞ்சீரடியும் அறுசீரடியும் முடுகியல்பெற்றும் வருமெனல்]

௭௮. முடுகியல் வரையார் முதலீ ரடிக்கும்.

இஃது, எய்தாதது எய்துவித்தது ; எழுசீரடியேயன்றி ...ஞ்சீரடியும் அறுசீரடியும் [3] அராகந் தொடுக்குமென்றமையின்.

இ—ள் : எழுசீரடிக்குமுன்னர் இடைநின்ற ஐஞ்சீரடியும் ...றுசீரடியும் முடுகியல் நீக்கார் என்றவாறு. அவற்றுக்குச் ...செய்யுள் :

---

1. இது சிந்தடி தூங்கியதற்குதாரணம்.

2. வருமனவும்—வருவனவும் என்றிருத்தல்வேண்டும்.

3. அராகம் என்றது ஈண்டு முடுகியலடியை.

எனவரும். அதற்கு முடிபியற்றன்மை [1] இன்றென்பது கருத்து. வஞ்சிப்பாவிற்குக் குறளடிச் சிந்தும் அல்லது இன்மையின் இவ்வாராய்ச்சி இன்றென்பது.

எனவே, ஆசிரியத்தளையொடு முடிபெய்தியவடியினைக் கலிப்படியென்றும் முடிபாக அறுசீரடி ஆசிரியத்தளையோடு நெறிபெற்று [2] வருதற்கும் கலிப்பாவிற்குச் சிறுபான்மையான் வருமென்பதூஉஞ் சொல்லப்பட்டது. அல்லாதார் ஐஞ்சீரடி முதலிய மூன்றும் கலிக்குரிய, பிறபாவிற்கு உரியவல்ல என்றற்கு வந்தது இச்சூத்திரமென்ப; அற்றன்று; அங்ஙனங் கூறில் தாம் வேண்டும் ஐஞ்சீரடி ஆசிரியத்துள்ளும் புகாதென்று மறுக்க. 'மூன்றுதலை' என்றது, யாண்டுமாகாதென்றவாறு. இவ்விலக்கணமெல்லாம் மேற்காட்டிய செய்யுளுட் கண்டுகொள்க. (௩௭)

[ஆசிரியப்பாவினுள் ஈற்றயலடியும் இடையடியும் முச்சீரானும் வருமெனல்.]

௩௮௦. ஈற்றய லடியே யாசிரிய மருங்கின்
தோற்ற முச்சீர்த் தாகு மென்ப. (௩௮)

௩௮௧. இடையும் வரையார் தொடையுணர் வோரே. (௩௯)

இவை இரண்டு சூத்திரமும் உரையியைபு நோக்கி உடனெழுதப்பட்டன. இவை, ஆசிரியத்துட் சிந்தடி இன்னுழி வருமென்றமையின் எய்தாதது எய்துவித்தனவாம்.

இ—ள்: ஆசிரியத்துள் [3] எருத்தடியொன்றும் இடையிரண்டுமாகி முச்சீரடி வரும் என்றவாறு.

'முச்சீர்த்து' என்று ஒருமை கூறினமையின் அஃது ஒன்றாகலும், 'தொடையுணர்வோர்' என்றமையின் இடைவருவன இரண்டாகலுங் கூறினானென்பது.

'இடையும் வரையார்' என்றமையான் ஈற்றயல் முச்சீர்த்தாதல் பெரும்பான்மை. உதாரணம்:

1. முன் வரையறையின்று என்று கூறுதலானே ஈண்டும் இன்றென்பது வரையறையின்று என்றிருத்தல்வேண்டும். வரையறையின்மை—வருதல்கூடாது என்னும் நியதியின்மை. எனவே வருதலுங்கூடும் என்றபடி.
2. வருமென்பதூஉம் என்றிருப்பது நலம்.
3. எருத்தடி—ஈற்றயலடி.



"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
..............................................
நீரற வறியாக் கரகத்துந்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே." (புறம். ௧)

என அப்பாட்டினை முழுவதூஉங் கொள்ள ஈற்றயலடி முச்சீர்த்தாயிற்று.

"நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்
சாரச் சார்ந்து தீரத் தீரும்
சார னாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே." (யா. வி. ௨௫௭)

என்பதனுள்,

"சார னாடன் கேண்மை."

எனவும்,

"சாரச் சாரச் சார்ந்து."

எனவும் முச்சீரடி இரண்டு வந்தன. ஏகாரம் பிரிநிலை. மற்று,

"நரந்த நாறுந் தன்கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே." (புறம். ௨௩௫)

என முச்சீரடி இடையும் ஒன்று வந்ததாலெனின்,—"தோற்ம்" என்றதனுள் எருத்தடி முச்சீராய் காலத்தாற் [1] குட்டம் பட்டு இனிது விளங்கும். இடையிடை ஒன்று வருதலும் உண்டாயினும் [2] அத்துணை இனிதன்று அதுவென்பது கொள்க.

"பெரியகட் பெறினே." (புறம். ௨௩௫)

என இருசீரடி வந்ததாலெனின், அதனைச் சொற்சீரடியென்று […]ாக.

"உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு [3] பிறக்கு நோக்காது." (புறம். ௩௬௩)

எனவுங் காட்டுப; இவை வஞ்சியடி விரவப்படு மென்பது. வெண்சீரான் வஞ்சியடி வருமோவெனின்,—வாரா; வஞ்சிச்சீர் விரவினல்லதென்பது.

"உப்பிலாஅ அவிப்புழுக்கல்."

1. குட்டம்—குறைவு. 'குன்றடி லங்குட்டம்' என்னும் சூத்திரம் நோக்குக.
2. அத்துணை—ஈற்றயலடி முச்சீரடியாக வருதலளவு.
3. 'பிறக்குநோக்காது' என்பது வஞ்சிச்சீர். அது முன்வந்த வெண்சீரோடு விரவி வந்தது.

என்பதோவெனின்,—அது மற்றை இருசீரடியொடு [1]கூட்டக் துக் காட்டலானும் வஞ்சியடிபோன்றது. (௬௬)

[கலிப்பாவிற்கு முச்சீரடியும் உரித்தெனல்]

௧௬௮. முச்சீர் [2]முரற்கையு ணிறையவு நிற்கும்.

இது, கலிப்பாவிற்கு அளவடியும் நெடிலடியும் அல்லனி னிறந்த அடியும் உரியவாக கூறி, இனிச் சிந்தடியும் உரித்தென் கின்றது.

இ—ள்: கலிப்பாவினுள் முச்சீரடி நிரம்பவும் நிற்கும் என்றவாறு.

'நிறைய நிற்றல்' என்பது, அச்செய்யுள் முழுவதும் அவ் வடியே வருதலாம். உம்மையான் ஒரு செய்யுள் நிறைய வாராது ஒன்றும் இரண்டும் பலவுமாகி அம்முச்சீரடி வருதல் பெருவர விற்றென்பது. [3]தாம் குறைந்த அடியாதலிற் கலிப்பாவிற்கு உறுப்பாகிய [4]சின்னத்துக் குறையநிற்கும் இயல்பினவாயினும், நிறைய நிற்றலுடைய தொச்சகத்தானென்றவாறு.

"செய்தாளக் கள்வன் மகன்." (கலி. ௫௧)

எனவே, வெண்கலியுள் இறுதிக்கணல்லது வாராது.

"நின்கண்ணுந் காண்பென்மன் யான்." (கலி. ௩௯)

என்பது, இடைவந்தது. [5]எண் உறுப்பின்கண் இரண்டும் நான் கும் வருமாறு கண்டுகொள்க.

---

1. கூட்டம்—வஞ்சியடிக் கூட்டம். என்றது வஞ்சியடியோடு கூடல் என்றபடி. வஞ்சியடிபோன்றது என்றதனுல் அன்ன தன்று. அதுபோன்று ஓசைதந்து நின்றது என்றபடி.

2. முரற்கை—கலிப்பா.

3. தாம் என்றது முச்சீரை.

4. சின்னம்—எண்ணுறுப்பின் பகுதி.

5. எண்ணுறுப்பு என்றது அம்போதரங்கத்தை. இவர் எண்ணுறுப்புள் (457-ம் சூ.) முச்சீரை இருசீர் என்றும் இரு சீரை ஒருசீர் என்றுங் கோடலின் அவற்றோடு ஈண்டுக் கூறி யன மாறுபடுகின்றன. ஆதலின் இது இடைச்செருகல்போலும். அன்றேல் மறந்து கூறினர் எனலுமாம். அன்றேல் அதுவும் உடன்பாடுபோலும். ஆராயத்தக்கது.



"நீர்வரக் கண்கலுழ்ந் தாங்குக்
கார்வரக் கண்டனங் காதலர்
தேர்வரக் கண்டில மன்னோ
பீர்வரக் கண்டனந் தோளே."

முச்சீரடி ஒரு செய்யுள் நிறையவும் வந்தவாறு. (௭௦)

[வஞ்சிப்பாவினிறுதி ஆசிரியவடியான் முடியுமெனல்]

௧௬௯. வஞ்சித் [1]தூக்கே [2]செந்தூக் கியற்றே.

இது, முறையானே அடியுரிமை கூறியவாற்றான் வஞ்சிப் பாவிற்குக் கூறியதிலன்; எற்றுக்கு? அது,

"வஞ்சி யடியே யிருசீர்த் தாகும்." (௧௫௭)

எனவும்,

"முச்சீ ரானும் வருமிட னுடைத்து." (௧௫௬)

எனவும் மேற் கூறப்பட்டமையின், அதுநோக்கி அடியுரிமை கூறப்படாத வஞ்சிப்பாவிற்கு வஞ்சியினது ஈற்றடியும் அவ் விருசீரடியும் முச்சீரடியுமாவான் சென்றதனை விலக்கி இன்ன அடியான் முடியுமென்கின்றது.

இ—ள்: வஞ்சிப்பாவினது இறுதியடி ஆசிரியவடி இறுதி யொன்று இறுக என்றவாறு.

எனவே, ஆசிரியத்திற்கு ஒழிய சீரானுந் தளையானும் வருமென்றவாறு. உதாரணம்:

"மரக்கட வித்தெழுதரு
செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ
வினைவயி யாகன்மாதோ
தாயினூர்வரக் குழுவிபோல
வேரவாது கூறின் றுடற்றியோர் நாடே." (புற. ௭)

[3]மண்டிலவாசிரியத்தானிற்றது.

'செந்தூக்கியற்றே' என்ற மாட்டேற்றானே,

"நற்றய வடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப." (தொல். செய். ௬௮)

எனவும்,

---

1. தூக்கு—தூக்கப்பட்ட (இறுதி) அடி.

2. செந்தூக்கு—ஆசிரியவடி.

3. மண்டிலம்—எல்லாவடியும் நாற்சீரடியான் வருவது.

"இடையும் வரையார் தொடையுணர் வோரே."
(தொல். செய். கூகூ)

எனவும் எய்திய‌விதி [1] ஈண்டும் எய்துவிக்க,

"அனையை யாகன் மாறே." (புறம். ௪)

என முச்சீரடி இடைவந்தது.

"இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொள்கைவல்லான் யாகனும்போ, எனவசன்
கொள்ளுமுன் புகித்த நாமமை
வெள்ளி நாரத் பூப்பெற் றிசினே." (புறம். ௧௧)

இஃது, ஈற்றயலடி முச்சீர்த்தாகி வந்த செந்தூக்கியற் றுயிற்ற வஞ்சிப்பா. பிறவும் அன்ன. ஈண்டுத் தனிச்சொல் வேண்டுமென்று பிற்காலத்து [2] நூல்செய்தாரும் உளர். அது சான்றோர் செய்யுள் எல்லாவற்றோடும் பொருந்தாமையானும், பிற்காலத்திற் செய்த நூல்பற்றி முற்காலத்துச் செய்யுட்கெல்லாம் இலக்கணஞ் சேர்த்துதல் பயமின்றாதலானும் அஃதமையா தென்பது. வஞ்சிப்பாவின் ஈற்றடி வரைந்தோதவே இடையாயின எல்லா அடியும் வரப்பெறுமென்பதாம்.

"நேரிழை மகளி ருணங்குணக் கவரும்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை."
(பட்டின. உ௩௪)

என ஆசிரியவடியும் [3] வெண்பாவடியும் இடை வந்தன. (எக)

[வெண்பாவினிறுதியடி முச்சீரான் வருமெனல்]

௱௮௪. வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்.

இது, வெண்பாவிற்கு ஈறு உணர்த்துகின்றது. ஆசிரியத் துக்கோவெனின்,—அனைக்கோதிய அளவடியானே இறுதலின் வேறுபாடு கூறவேண்டா; [4] எருத்தடியும் இடையடியும் முச்சீரான் வருமென வேறுபட்டவழிக் கூறி, அல்லாதன அளவடியாதல் கொள்ளவைத்தானென்பது.

1. ஈண்டு—வஞ்சிப்பாவினிறுதியில் ஆசிரியவடிவருமிடத்து.
2. நூல்செய்தார்—சிறு காக்கைபாடினியார் முதலியோர் போலும்.
3. வெண்பா அடி என்றது—காட்டிய உதாரணத்துள் 2-ம் அடியை. அது முழுவதும் இயற்சீர் வெண்டளையான் வந்தமை காண்க.
4. எருத்தடி—ஈற்றயலடி.



இ—ள்: வெண்பாவின் இறுதியடியொன்றும் முச்சீரான் அன்றி வாராது என்றவாறு. அவை முன்னர்க் காட்டுதும்; அஃதேல்,

"அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்." (மூதுரை ௪)

என முச்சீரடி இடையும் வந்ததால் வெண்பாவிறுளெனின்,—முச்சீர்த்தொன்றது 'ஆகும்' என்று ஆக்கங் ([1] கூறத்) கொடுத்தமையான் அத்துணை ஆக்கமின்றி இடையுஞ் சிறுபான்மை வருமெனக் கொள்க. [2] அல்லாதார் அதனை வெண்பாவன் றென்ப. (எஉ)

[வெண்பாவினிறுதிவரும் முச்சீரடியின் ஈறு அசைச்சீரான் வருமெனல்]

௱௮௫. அசைச்சீர்த் தாகு மவ்வயி னான.

இது மேலதற்கு எய்தியதோர் விதி.

இ—ள்: வெண்பாவின் இறுதிவரும் முச்சீரடிஈற்றுச் சீர் வரப்பெறுவது அசைச்சீரல்லாது என்றவாறு.

மேல்,

"அசைநிலை வரையார் சீர்நிலை பெறுதல்."
(தொல். செய். உஎ)

என்றான், அவற்றுள் உரியசைச்சீர் முதலும் இடையும் இறுதியும் வருமென்பான்,

"இயற்சீர்ப் பாற்படுத்து." (தொல். செய். உஅ)

இயற்றுக என்றான். அவ்வாறே [3] இயலசைச்சீரும் முச்சீரடி இறுதிவருமென்பது ஈண்டுக் கூறியவாறு. (எங)

1. கூற என்பது வேண்டியதில்லை. கூறி என்றிருந்திருக்கலாம்.
2. அல்லாதார்—இவ்வாசிரியரல்லாதார். அவர் யாரிடம் என்ப. யாப்பருங்கல விருத்தி நோக்குக.
3. இயலசைச்சீர்—நேரும் நிரையுமாகிய இயலசைச்சீர்.

[வெண்பாவி னிறுதியடியின் இரண்டாஞ்சீர் நேரீறாய் வரின் அதனோடு நிரையும் நிரைபும் இறுதிச் சீராகி வந்து தளைக்குமெனல்]

௬௬. நேரீற் றியற்சீர் நிரையு நிரைபுஞ்
சீரேற் றிறூஉ மியற்கைய வெண்பா.

இது, மேற்கூறப்பட்ட இயற்சீர் நான்கும் வருங்கால் இன்னுழி நின்று இன்னவாறு கொள்ளப்படுமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: [1] நேரீறுதி வந்த நிரையும் நிரைபுமே இறுதிச் சீராய் நிற்பன என்றவாறு.

எனவே, [2] தனிவந்த நிரையும் நிரைபும் நிரைமுதற் சீர் போலத் தளைகொள்ளப்படுமென்பதாம். 'ஏற்றிறூஉம்' என்ற இலேசினான் [3] இடைவந்த நிரைபசையும் அவ்வாறு கொள்க; அஃது,

"இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே."
(தொல். செய். ௨௮)

என்பதனான் அடங்காதோவெனின்,— அடங்காது; என்னை? [4] அசைச்சீர்தான் அடங்குமாற்றுக்கு ஆண்டுக் கூறினான், அது பிறிதுசீர் அசைச்சீரோடு தட்குமாற்றுக்குங் கூறல்வேண்டுமென்பது; அல்லதூஉம், ஆண்டு அளவடிக்குக் கூறினான் இது சிந்தடிக்கென்பது. வரலாறு:—

"வாரிய பெண்ணை வருகுரும்பை வாய்ந்தனபோல்
சேரிய வாயினு மென்செய்வ—கூரிய
கோட்டியானைத் தென்னன் குவிமெந் தணிவரைக்
கோட்டுமண் கொள்ளா முலை." (முத்தொள்ளாயிரம். ௭௧)

எனவும்,

"அயிற்கதவம் பாய்ந்துழக்கி யாழித்தேர் குத்தி
வெயிற்கதவஞ் சேர்த்தெடுத்த கோட்டாற் பனிக்கடலுட்

1. நேரீறுதி வந்த என்றது இரண்டாஞ் சீராகிய நேரீற்றியற்சீருக்குப்பின்னே நிரையும் நிரைபும் இறுதிச்சீராய் வந்து தளைத்து முடியும் என்றபடி.

2. தனிவந்த—ஈற்றுச் சீராகித் தனியே வந்த.

3. இடை—வெண்பாவினிடை.

4. அசைச்சீர் இயற்சீரோடு அடங்குமாற்றுக்குக் கூறினான் என்றபடி.



பாய்செய்த நாவாய்போற் றோன்றுமே எங்கோமான்
காய்சினவேற் கோதை களிறு." (முத்தொள்ளாயிரம். ௧௭)

எனவும் இவற்றினுட் 'கொள்ளா' எனவும் 'கோதை' எனவும் நின்ற நேரீற்றியற்சீர் முன்னர் முலையெனவும் களிறெனவும் நிரையும் நிரைபுஞ் சீரேற்றவாறும் வெண்பாட்டீற்றடி முச்சீர்த்தாயவாறும் ஆண்டு அசைச்சீராய் வந்தவாறுங் கண்டு கொள்க.

[1] என்றூர்க்கு முச்சீரடியின் முதற்சீர்க்குத் தளை கூறுமோ வெனின்,—ஆண்டுத் தளைவகையின்றியும் வருதலின், அதனை வரைந்து கூறுமென்பது; [2] என்னை?

"கோட்டுமண் கொள்ளா முலை." (முத். ௭௧)

எனவும்,

"காய்சினவேற் கோதை களிறு." (முத். ௧௭)

எனவும் தளைவகையான் வந்தன.

"உருஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
[3] செறாஅய் வாழியென் னெஞ்சு." (குறள். ௧௨௦௦)

எனவும்,

"கலாஅற் கிளிகடியுங் கானக நாட
விலாஅர்க் கில்லை தமர்." (நாலடி. ௨௮௩)

எனவுந் தளைவகையின்றி வந்தன. (௭௪)

[வெண்பாவி னிறுதியடியி னிரண்டாஞ்சீரிறுதி நிரையாய் வரின் அதனொடு நேரும் நேர்பும் வந்து தளைத்து முடியுமெனல்]

௬௭. நிரையவ ணிற்பி னேரு நேர்பும்
வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர்.

இஃது, ஒழிந்த அசைச்சீர் நிரையீற்றுப்பின்னன்றி வாரா தென்கின்றது.

1. என்றூர்க்கு...கூறுமோ எனின் என்பது வலிந்து கோடலாம்.

2. என்னை என்பது வேண்டியதின்று.

3.—இச் செறாஅய் இலாஅர் என்பவற்றை இவர் மூன்று மாத்திரையாக்கித் தளைவகையின்றி வந்தன என்றது பொருத்த மின்று. செறாஅய் எனவும் இலாஅர் எனவும் நான்குமாத்திரை அளபெடையாக்கின் தளைவழுவாது. அங்ஙனங் கொள்வர் நச்சினார்க்கினியர். அவருரை நோக்குக.

இ—ள்: நேரீற்றியற்சீர் நின்றவழி நிரையீற்றியற்சீர் நிற்பி னென்பான் 'நிரையவண் நிற்பின்' என்றான். ஆண்டு நிரையும் நிரையும் வரில் தளைவழுவாமாதலான் நேரும் நேர்புமே வந்து சீரேற்று முடிதல் வேண்டுமென்றவாறு.

"கொழுநனை மைந்தன் கொளர்ந்தநற் காக
முழுமுதல் பயந்தன பால்."

எனவும்,

"வண்டொன்று வந்தது வாரற் பனிவாடாய்
பண்டன்று பட்டினங் காப்பு." (முத்தொள். ௬௭)

எனவும் இவற்றுட் பாய்ந்ததெனவும் பட்டினமெனவும் வந்த நிரையீற்றியற்சீர்ப்பின்னர் நேரும் நேர்பும் வந்தன. முன்னர்,

"நேர்ந் தியற்சீர் நிரையு நிரையும்." (தொல். செய். ௭௪)

எனக் கூறி ஈண்டு நிரையவண் நிற்பினெனச் சுட்டிக் கூறிய வதனானே அதுவும் நிரையீற்றியற்சீரென்பதூஉம் அஃதிரண்டாஞ் சீரென்பதூஉங் கொள்க; [1] அல்லாதார், அதனை வெண்சீர்க்கும் பொதுவெனக் கூறி,

"வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே." (தொல். செய். ௨௫)

என்றதனான் வெண்சீரிறுதி நிரையாக இயற்றி அதன் அடிப் பின் நேர்பசை கொடுப்ப,

"எய்போற் கிடந்தானென் னேறு." (பு. வெ. வாகை. ௨௨)

என்புழி,

"கிடந்தானென்."

என நின்ற புளிசெல்வாயினைக் கணவிரியாக இயற்றி,

"நிரையவண் ணிற்பின் நேரும் நேர்பும்."

என்றதனான் ஏது என்னும் நேர்பசை கொடுப்பர். அஃது, ஈண்டு ஆராய்ச்சியின்றென்பது; என்னை? [2] இது கட்டளையடி யன்மையின். (௭௫)

[கலிப்பாவினிறுதி ஆசிரியப்பாவானும் வெண்பாவானும் முடியுமெனல்]

௧௮௮. **எழுசீ ரிறுதி யாசிரியங் கலியே.** (௭௬)

௧௮௯. **வெண்பா வியலினும் பண்புற முடியும்.** (௭௭)

1. அல்லாதார்—தொல்காப்பியரல்லாதார்.
2. இதுவென்றது 'எய்போற்கிடந்தானென் னேறு' என்றஅடியை.



இவை, இரண்டு சூத்திரமும் முறையானே கலிப்பாவிற்கு, முன்னோதோர் அடி அதற்கு வருந்தில்லாமையின் வகுக்கின்றன.

.................................................................

என்றார்க்கு முதல்நூல் கோடியும் ஈற்றது சிந்தடியுமாகக் கொள்ளல் [1] அவ்வெழுசீரடியெனின் அங்ஙனங் கொள்ளாமைக் கன்றே,

"ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற்
றோற்ற முச்சீர்த் தாகு மென்ப." (தொல். செய். ௬௮)

எனவும்,

"இடையும் வரையார் தொடையுணர் வோரே."

எனவும் கூறிற்றென்பது. 'எழுசீரிறுதி யாசிரியம்' (௧௮௮) எனவே, ஆசிரியவடி பலவும் வந்து ஈற்றடி முச்சீராக வருமென்பது கொள்க.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்."

என்னும் கலிப்பாவினுள்,

"இனைநல முடைய கானஞ் சென்றோர்."

என்பது, ஈற்றயன் முச்சீரான் ஆசிரியத்தாற் கலிப்பா இற்றது.

"மணிநிற மலர்ப்பொய்கை."

என்னும் கலிப்பாவினுள்,

"மெல்லியான் செவிமுதல் மேல்வந்தான் காலைபோ
லெல்லாந் துயிலோ வெறுப்புக நின்பெண்டிர்
இல்லி னெழீஇய யாழ்தழீஇக் கள்ளாவாய்ப்
பாணன் புகுதராக் கால்." (கலி. ௭௦)

என வெண்பாவியலினானும் பண்புற வந்தவாறு.

பண்புறவென்பது, விசேடம்; மிக முடியுமென்றவாறு. எனவே, [2] ஈண்டுக் கூறுத [3] இருசீரடியானும் நாற்சீரான் வந்த கலிப்பாவடியானும் ஐஞ்சீரடியானும் முடிவன கொச்சகக் கலியுள; அவை இத்துணை விசேடமிலவென்றவாறு. ஈண்டு விதந்து கூறியவெல்லாம் பெரும்பான்மையும் ஒத்தாழிசைக் கலிக்கெனவுணர்க. 'இயல்' என்றதனாற் கட்டளை வெண்பாவே வரல் வேண்டுவதில்லை எனக் கொள்க. 'பண்புற' என்றதனான் மூன்றடியின் இழிபிற் பண்புபட வாரா வெள்ளைச் சுரிதகமெனவுங் கொள்க. (௭௭)

1. அவ்வெழுசீரடி—அந்த எழுசீரடி. (௧௮௮)
2. ஈண்டு—இவ்விரண்டு சூத்திரத்துள்ளும்.
3. இருசீரடி—வஞ்சியடி.

சொல் திசைச்சொல் வடசொல்லெனினும் அமையும். இயலான்—நாற்சொல்லினையும் உலகத்தார் வழங்குகின்ற வழக்கு வடிவினான். யாப்புவழிப்பட்டன—மேற்பகுத்த யாப்புவழிப் பொருத்தமுடைத்தாகிக் கிடப்பது என்றவாறு.

[1]அஃதாவது, வழக்கெனவுஞ் செய்யுளெனவும் [2]இடை தெரியாமல் ஒருவாய்ப்பாட்டான் வழக்குஞ் செய்யுளுமாகி ஒரு சொற்றொடரினைச் சொல்லியதுபோலச் செய்யுள் செய்தலென்றவாறு. 'சாத்தனுண்டான், கொற்றனுண்டான்' எனவும், 'சாத்தனுறங்கினான், கொற்றனுறங்கினான்' எனவும், 'சாத்தனை யறியாதார் ஒருவரையு மறியாதார்' எனவும், 'சாத்தனிற் கொற்றன் போமே' எனவும் நின்ற வழக்கியலை முறையானே ஆசிரியமும் வெண்பாவுங் கலிப்பாவும் வஞ்சியுமாகப் [3]பரப்பப் பட்ட யாப்பு வழிப்படுத்துக் கண்டுகொள்க.

"ஓதியு மோதா ருணர்விலார்." (நாலடி. ௨௭௦)

என்றுஞ் செய்யுள் வழக்கிற்றாகவும் சொல்லப்படும். வழக்கு வடிவினானெனவே சொன்மரபும் பொருண்மரபும் அடங்கக் கூறினான்; என்னை? பொருளன்றி நாற்சொல்லையும் வழங்கா ராகலின்; எனவே, சொல்லும் பொருளும் அவ்வக்காலத்தார் வழங்குமாற்றானே செய்யுள்செய்க என்பதாயிற்று. இதனாற் பயன்: ஒருகாலத்து வழங்கப்பட்ட சொல் ஒருகாலத்தில்லாத லும் பொருள் வேறுபடுதலும் உடைய. அவை: [4]அதோளி இதோளி உதோளி (சொல்—௧௪௧) எனவுங் குயின் எனவும் இவை ஒருகாலத்துளவாகி இக்காலத்தில்லாயின. அவை முற் காலத்துளவென்பதே கொண்டு வீழ்ந்தகாலத்துஞ் செய்யுள்

1. மரபாவது நாற்சொற்களும் வழக்கின்கண் வழங்கு கின்றபடியே செய்யுளின்கண்ணும் யாக்கப்பட்டுக் கிடப்பது. யாத்தல் - இயைத்தல்; வழக்குமரபே செய்யுளாதலின் செய் யுண் மரபு மதுவாகும்.

2. இடை - இடம்; வேறுபாடுமாம்.

3. பரப்பப்பட்ட - பகுக்கப்பட்ட என்றிருப்பது நலம்.

4. தொல் - எழுத்ததிகாரத்து, "சுட்டுமுதலாகிய இகர விறுதியும்" என்பதனால் முடிக்கப்பட்ட அதோளி முதலியனவும் "குயின்என் கிளவி இயற்கை யாகும்" என்பதனால் முடிக்கப் பட்ட 'குயின்' என்கிளவியும் தொல்காப்பியர் காலத்து வழங் கின என்பது பெறப்படும். இவை தொல் - சொல்லதிகாரத்து "கடிசொல் லில்லை காலத்துப் படினே" என்னுஞ் சூத்திரத்து துன்றென முடிந்தலாற் கடியப்பட்டன.



ய்யப்படா. அவை ஆசிரியர் நூல்செய்தகாலத் துளவாயினுங் டைச்சங்கத்தார் காலத்து வீழ்ந்தமையிற் [1]பாட்டினுந் தொகையினும் அவற்றை நாட்டிக்கொண்டு செய்யுள் செய் தார்; அவற்றுக்கு இது மரபிலக்கணமாகா தென்பது.

இனி, பாட்டினுந் தொகையினும் உள்ள சொல்லே மீட் டொருகாலத்துக்கு உரித்தன்றிப் [2]போயினவும் உள; அவை முற்காலத்துளவென்பதே கொண்டு பிற்காலத்துக் காட்டிச் செய் ர் செய்யப்பெறா என்பது.

இனி பொருளும் இவ்வாறே காலத்தானும் இடத்தானும் வேறுபடுதலுடைய. ஒருகாலத்து அணியுங் கோலமும் ஒரு காலத்து வழங்காதனவுள. ஓரிடத்து நிகழும் பொருள் மற்றோரிடத்து நிகழாதனவுமுள. அவ்வக் காலமும் இடனும் நோக்கி ஏற்றவாற்றாற் செய்யுள் செய்யவேண்டுமென்பது. ஒரு காலத்துக் [3]குழைபெய்தாரென்றும், ஒருகாலத்துக் [4]குழல் ட முடித்தாரென்றும் ஆண்மக்களை ஒழிந்த காலத்தும் அது றார். பதினெண்பாடைக் [5]தேசிகமாக்கள் அணிவிசேடமுங் கோலத்தினையும் விரவிக் கூறாது அவ்வக்காட்டாரே பூணுமாற் றானும் புனையுமாற்றானும் ஏற்பச் சொல்லுதல் மரபு.

இனி நான்கு நிலத்தினும் ஓரிடத்துப் பொருளை ஓரிடத்த தாகச் சொல்லுதலும், உலகொடு மலைதலும், சமயங்களொடு மலைதலும், கலையொடு மலைதலும் பிறவும் இன்னோரன்னவும் பொருண்மரபின்பாற்பட்டடங்கும். [6]இவை நாடகவழக்கின மென்பது முன்னர் அகத்திணையியலுட் கூறினாம்.

"புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி
யொலிக்குழைச் செயலை யுடைமா ணல்குல்." (அகம். ௭)

என்பது, [7]பருவத்துக்கேற்ற அணிகூறியது.

1. பாட்டினுந் தொகையினும் என்றது பத்துப் பாட்டி லும் எட்டுத்தொகையினும் என்றபடி.

2. போயின - வினைப்பெயர்.

3. குழை - தோடு.

4. குழல் - பெண்கள் மயிர்முடிக்கும் ஐம்பாலுள் ஒன்று.

5. தேசிகம் - தேச சம்பந்தம்.

6. இவை - ஓரிடத்துப் பொருளை ஓரிடத்துப் பொரு ளாகச் சொல்லுதன் முதலியன.

7. பருவம் - வயசப்பருவம், ஈண்டுப் பேதைப்பருவம்.

"[1]கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும் [2]புழுகின்
வில்லோர் தூணி வீங்கப் பெய்த
அப்பு நுனை யேய்ப்ப அரும்பிய இருப்பை
செப்படர் அன்ன செங்குழை அகந்தோ
றிழுதி னன்ன தீம்புழற் [3]றுய்வாய்
[4]உழுதுகாண் டுளைய வாகி யார்கழல்
பாலி வானிற் [5]காலொடு பாறித்
[6]துப்பி னன்ன [7]செங்கோட் டினவொடு
[8]நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரிக்கு
மத்த நண்ணிய அங்குடிச் சீறூர்க்
கொடுநுண் ணோக்கின் மகளிர் சேர்சிய
தொடிமா ணுலக்கைத் தூண்டோர் பாணி
நெடுமால் வரைய குடிஞையொடு இரட்டுங்
குன்றுபி னொழியப் போகி உரந்துரந்து
ஞாயிறு படினு மூர்சேய்த் தெனாது
துணைபரி துரக்குந் துஞ்சாச் செலவின்
எம்மினும் விரைந்துவல் லெய்திப் பன்மா
ணோங்குயர் நல்லி லொருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணுடை மடந்தை கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே." (அகம். ௯)

என்றவழிக் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் ஏற்றபொருள் தத்தம் மரபிற்றாய் வந்தனபலவுங் கண்டுகொள்க.

மற்றும் நாற்சொல்லியலென்பது, வழக்காயின் அது செய்யுட்குரிய [9] திரிசொற்கும் ஏற்றவாறென்னையெனின்,—அவையுஞ் சான்றோர் வழங்கினவாறன்றி வேறுபடக் காட்டப்படா

1. கொல்வினை—கொற்றொழில்.
2. புழுகு—அம்பின்மொட்டு
3. துய்வாய்—பூ; ஆகுபெயர்.
4. உழுதுகாணல்—துளைதாள்நீக்கிக்காணல். ஆர்—ஆர்க்கு.
5. காலொடு—காற்றால்.
6. துப்பு—பவளம்.
7. செங்கோடு—சிவந்தமேடு.
8. நெய்த்தோர்—இரத்தம்.
9. திரிசொல்லும் சான்றோர் வழக்காதலின் வழக்கினுள் அடக்கினான் என்றபடி.



வெனவும், அவற்றுள்ளும் காலம்பற்றித் திரிந்தனவும் உளவா யினும் அவை தவிர்ந்துஞ் செய்யுள் செய்யப்படுமென்றற்கும் 'நாற்சொல்லியலான்' என அடங்கக் கூறினானென்பது. மலை யென்றதனைப் பிறங்கலென்றும் சென்று இக்காலத்துச் செய்யுள் செய்யுங்கால் அப்பொருண்மையாகேன உடரென்று செப்பவோ வெனின் அது மரபன்று.

இனிக் குடவாயிலென்பதனை,

"கொற்றச் சோழர் குடந்தை வைத்த." (அகம். ௬0)

எனவும்,

உறையூரென்பதனை,

"பிறங்குநிலை மாடத் துறந்தை போகிய." (புறம். ௬௯)

எனவும் மேலையார் திரித்தனவையாயினை இக்காலத்துந் திரித்துக்கொள்ளப்படுவன உள. அவை [1] 'களந்தை' என்றற் றொடக்கத்தன. பிறவும் இவ்வாறு வருவனவும் அறிந்துகொள்க.

[2] "கடையாயார் நட்பிற் கமுகனையர்." (நாலடி. ௨௧௬)

என இதனுள் மூவினத்தனவாகிய புல்லை கூறி ஒழிந்த மரங்க ளொப்பன உளவாயினும் உடன்கூறாராயினர். இன்னோன்ன வுஞ் செய்யுட்கு மரபெனப்படுமென்பது.

மற்று, 'பாட்டுரை நூலே' என எழுவகை வகுத்த பகுதியையுஞ் செய்யுட்கு மரபென மேற்கூறினான்; அத னானே இவ்வேழுவகையானன்றி [3] ஆசிரியர் வேண்டுமாற்றானும் பிறபாடை மாக்கள் வேண்டுங் கட்டளையானுந் தமிழ்ச் செய் யுள் செய்தல் மரபன்றென்றவாறு. (௮௫)

1. களந்தை—களத்தூர்.
2. "கடையாயார் நட்பிற் கமுகனைய ரேனை
யிடையாயார் தெங்கி னனையர்—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு."
என்னும் (நாலடி. ௨௧௬) செய்யுளில் கமுகு தெங்கு பனை என்னும் மூன்றும் புறக்காழனவாதலின் புல்லினமென்றார். "புறக்காழனவே புல்லெனப் படுமே" என்பது (தொல்காப்பியம் மரபியல். ௮௬) சூத்திரம்.
3. ஆசிரியர் என்னு முற்பாடம் பொருந்தவில்லை.

[இன்னவோசை ஆசிரியப்பாவெனல்]

௩௯௩. அகவ லென்ப தாசிரி யம்மே.

இது, நிறுத்தமுறையானே தூக்கு உணர்த்துவா [1]னெழுந்தான், அஃதாவது பாவினைத் துணிக்கப்படுவதாகலான் அப்பாவினை உணர்த்துகின்றா னென்பது. நிறுக்கப்படுபொருள் பொன் [2]னானும் வெள்ளியானும் ஒன்றுபெற்ற வழியன்றிக் கழஞ்சுந் தொடியுந் துலாமுமெனத் துலைக்கோலாற் றூக்கி அளக்குமாறில்லை; அதுபோலப் [3]பாவின்றித் தூக்கியளக்கப்படும் பொருள் இன்மையானும், பாவினை எழுநிலத்தெழுந்த [4]செய்யுள் அடி வரையறையுடைய பாட்டிற்கு இன்னவாறு வந்த தென்றறிவிப்பது தூக்காகலானும், எல்லாப் பாவிற்குந் தூக்குப் பொதுவாகலானும் பாவொடு புணர்த்தே தூக்குணர்த்தப் பட்டது.

இ—ள்: அகவல் என்பது ஆசிரியம்மே — வழக்கினுள் அகவலென்று வழங்கப்படும் பாவினை ஆசிரியத்திற்குரிய பாவென்ப என்றவாறு.

[5]அகவிக் கூறுதலான் 'அகவல்' எனக் கூறப்பட்டது. அஃதாவது, [6]கூற்றும் மாற்றமுமாகி ஒருவன் கேட்ப அவற்கு ஒன்று செப்பிக் கூறாது தாங்கருதியவாறெல்லாம் வரையாது சொல்லுவதோ ராறும் உண்டு. அதனை வழக்கினுள்ளார் [7]அழைத்தலென்றுஞ் சொல்லுப; அங்ஙனஞ் சொல்லுவார் சொல்லின்கண் எல்லாந் தொடர்ந்து கிடந்த ஓசை அகவலெனப்படும்; அவை: தச்சுவினை மாக்கள் கண்ணும், [1]களம்பாடும் வினைஞர்கண்ணும், கட்டுங் கழங்குமிட்டு உரைப்பார்கண்ணும் தம்மில் [2]உறழ்ந்துரைப்பார்கண்ணும், [3]பூசலிசைப்பார்கண்ணும் கேட்கப்படும். கழங்கிட்டுரைப்பார் அங்ஙனமே வழக்கினுள்ள தாய்க் கூறும் ஓசை ஆசிரியப்பாவெனப்படுமென்றவாறு. (அக)

1. எழுந்தான்—வினையாலணையும் பெயர். அஃதாவது—தூக்காவது.
2. ஆனும் என்பன விகற்பப்பொருளில் வந்தன.
3. பா—ஓசை; செய்யுளை அறிவிப்பது.
4. செய்யுள் என்பது செய்யுளுள் என்றிருத்தல்வேண்டும்.
5. அகவல்—அழைத்தல், "அகவன் மகளே அகவன் மகளே" (குறு—உங) என்னும் பாட்டையும் அதன் உரையையும் நோக்குக.
6. கூற்று—ஒருவர் ஒன்று கூறுவது. ஒருவர் வினவிக் கூறுவதுமாம். மாற்றம்—அதற்கு மறுமாற்றம் பின் ஒருவர் கூறுவது. விடையாகக் கூறுவதுமாம். ஆகிச் சொல்வது என இயையும். இதனை இக்காலத்தும் கிளைக்கூத்தர்பாற் காணலாம். கேட்பச் செப்பிக்கூறாது என இயைக்க. ஆகி என்பதனைக் கூறாது என்பத னோடு முடிப்பது சிறப்பன்று.
7. அழைத்தல்—அழைத்துக் கூறல்.



[இன்னவோசை வெண்பாவெனல்]

௩௯௪. அஃதான் றென்ப வெண்பா யாப்பே.

இது, வெண்பாவாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மேற்கூறிய அகவலோசையன்றிச் செப்பிக் கூறும் ஓசை எல்லாம் வெண்பாவெனப்படும் என்றவாறு.

யாப்பென்றதனான் அப்பாக்கள் செய்யுண் முழுதும் ஒருங்கு தழீஇக் கிடக்குமென்பது கொள்க. அகவிக் கூறாது ஒருவற்கொருவன் இயல்புவகையானே ஒரு பொருண்மை கட்டுரைக்குங்கால் எழும் ஓசை செப்பலோசை யெனப்படும். இவ்விரண்டுமல்லது வழக்கினுள் இன்மையான் அஃதான் றெனவே [4]அதனிலக்கணம் [5]போல்வதாயிற்று. (அஉ)

[இன்னவோசை கலிப்பாவெனல்]

௩௯௫. துள்ள லோசை கலியென மொழிப.

இனி, துள்ளலுந் தூங்கலும் செய்யுட்கணன்றி வழக்கினுஞ் செய்யுளினும் ஒப்பவருவனவல்ல; அவற்றுள், துள்ளலோசை உணர்த்துகின்றது.

இ—ள்: துள்ளலோசையென்பது, வழக்கியலாற் சொல்லாது [6]முரற்கைப்படுமாற்றால் துள்ளச் சொல்லும் ஓசை; அது கலிப்பாவெனப்படும் என்றவாறு. (அங)

1. களம்—போர்க்களம்.
2. உறழ்ந்து—மாறுபட்டு.
3. பூசல்—போர்.
4. அதன்—வெண்பாவின்.
5. போல்வது—பெறுவது என்றிருப்பது நலம். நச்சருரை நோக்குக.
6. முரலல்—துள்ளி ஒலித்தல்.

[இன்னவோசை வஞ்சிப்பாவெனல்]

௩௯௮. **தூங்க லோசை வஞ்சி யாகும்.**

இது தூங்கலோசை புணர்த்தல் நுதலிற்று.

இ—ள் : அடியிற்றூங்காது சீர்தொறுந் தூங்குமோசை தூங்கலோசை எனப்படும். அது [1] போலும் வஞ்சிப்பாவாவது என்றவாறு. (அச)

[மருட்பா இவ்வாறு வருமெனல்]

௩௯௯. **மருட்பா வேனை யிருசா ரல்லது**
**தானிது வென்னுந் தனிநிலை யின்றே.**

இது, மருட்பாவிற்கு வேறுபாடு இல்லை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: மருட்பாவிற்கு உறுப்பாலது ஒழிந்த இருகூறு மல்லது தானாக வேறுபடுத்து இதுவெனக் காட்டுந் தனிநிலையின்று என்றவாறு.

எனவே, இரண்டன் கூட்டத்துக்கண்ணது மருட்பாவாவதென்றவாறு. பரிபாடற்கு [2] இருசார் அன்மையின் ஈண்டுக் கூறிற்றிலர். அது மேற்கூறுப. 'ஏனை இருசார்' என்றதென்னை யெனின்,—இச்சூத்திரத்து முன்னர் அதிகாரப்பட்டு நின்ற துள்ளலோசையுந் தூங்கலோசையு [3] மல்லது, அங்ஙனஞ் செய்யுட்கு உரியவன்றி வழக்கிற்கு வருவனவாகி ஒழிந்து நின்ற செப்பலும் அகவலுமே என்றற்கு [4] அவ்வாறு கூறினானென்பது. அவை இரண்டுங் கொள்ளுங்கால் நிறுத்தமுறையாற் கொள்ளாது, எதிர்சென்று கொள்ளப்படும். கொள்ளவே செப்பன் முன்னாகவும் அகவல் பின்னாகவும் வருவதாயிற்று மருட்பா. இனி நிறுத்தமுறையானே கொள்வார் வெண்பா முதலாக அகவல் பின்னாக வருவது மருட்பாவன்றெனவும்,

1. போலும் என்பது பெறுவது என்றிருப்பது நலம்.

2. இருசார் இன்மையின் என்றிருப்பது நலம். S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்புப் பொருத்தமின்று.

3. அல்லது என்பது ஒழிந்துநின்ற என்பதோடு முடியும். அல்ல எனினுமாம்.

4. அவ்வாறு கூறினான் என்றது, ஏனை இருசார் என்று கூறினார் என்றதை.



...பா வொழித்து ஒழிந்த பாத் தம்முண் மயங்குவனவே ...ட்பாவெனவுங் கூறுப. கலிப்பாவும் வஞ்சிப்பாவும் [1] ஆசிரி...தொடும் வெண்பாவோடும் மயங்கியிறினும் மருட்பாவெனப் ...ாமையின் அது பிழைக்குமென்பது. (அரு)

[அப் பாக்களானேயே பாட்டு வருமெனல்]

௪௦௦. **அவ்விய லல்லது பாட்டாங்குக் கிளவார்.**

இது, மேலவற்றிற்கு ஓர் வரையறை கூறுகின்றது.

இ—ள் : மேற்கூறிய நான்குபா விலக்கணத்தானல்லது ...டின்கண் வேறுபாடாகக் கூறப்படாது என்றவாறு.

இது கூறிப்பயந்ததென்னையெனின்,—மேற்கூறிய பாக்க...ம் பெயர் கூறாத செய்யுட்களும், [2] அவை பாவாகவினல் ...ி வேறு தமக்குப் பாவிலவென்பதூஉம்,

"மருட்பா வேனை யிருசா ரல்லது
தானிது வென்னுந் தனிநிலை யின்று." (௯௯)

...வே அவ்விரண்டன் கூட்டத்தின்கண்ணும் வேறோர் பாப் ...குமென்று கொள்ளினுங் கொள்ளற்க வெனவும், பிற்கா...து நூல் செய்யும் ஆசிரியர் பிறவகையாற் பாவுறுப்பினை, ...க்கம்பட வேண்டுவொருளராயின் அவரை விலக்கியுங் கூறிய ...து. அல்லதூஉம் மாணாக்கன் இதன் [3] முதனூல் செய்த ...ிரியன் பண்ணுந் திறனும் பகுத்தானைக் கண்டு இவற்றை ... பாவும் இனமுமெனப் பகுத்தான்கொலென்று ஐயுறுமை ...க்கி [4] இயனூலுள் அவ்வாறு கூறிற்றிலனெனச் சொல்லினு ...ன்பது. நான்கு பாவினையும் நோக்கி 'ஆங்கு' என்றான்; ...க்து செய்யுளை நோக்கி 'அவ்வியல்' என்றானென்பது. (அசு)

1. ஆசிரியவிற்றானும் வெண்பாவிற்றானும் முடியும் கலி...ும் வஞ்சியும் அவ்விரண்டோடும் மயங்கியும் மருட்பாவென்று ...ால்லப்படாமையின் அது பிழைக்குமென்றபடி.

2. அவை மேற்கூறிய அகவல் முதலிய நான்கும். பா—...டு ஓசை.

3. முதனூலாசிரியன்—அகத்தியன்.

4. இயனூல்—இயற்றமிழ் நூல். இயல்—இலக்கணம்.

5. நாற்து செய்யுளாவன—ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, ...ஞ்சிப்பா, மருட்பா என்பன.

[தூக்காவது இதுவெனலும் அது நடக்குமிடம் இவையெனலும்]

௯௯. நூக்கியல் வகையே யாங்கென மொழிப.

இது, தூக்காமா றுணர்த்துகின்றது.

இ—ள்: தூக்கெனப்பட்ட உறுப்பு நடக்கும் இடவகை அச்சொல்லப்பட்ட நான்கிடமுமாம் என்றவாறு.

ஆங்கென்றது அப்பெற்றித்து என்றவாறாகக் கொள்ளற்க. அவ்விடம் தூக்கு இயலும் இடப்பகுதி என்றவாறு; என்னார்க்குத் தூக்கினது இலக்கணம் ஈண்டுக்கூறியதிலனாலெனின்,— தூக்கென்பது சொல்லின்முடிபு இலக்கணத்[1]திற்றது. தூக்கென்பது, நிறுத்தலும் அறுத்தலும் [2]பாடலுமென்றின்னோரன்னவற்றின்மேல் நிற்கும்; ஈண்டும் அவ்வாறே பாவினை இத்துணையடியென நிறுத்தும் [3]கூறுபாடறிதலும், அவ்வத் தூக்குள்வழிச் சொல்லுவாராது உறுப்பு விகாரப்பட்டு [4]ஓடுவது போன்று, அசையுமாறுங் கண்டுகொள்க. இனி, அதுதான் இன்னபொருளை அறுத்தற்கு என்பான் பாக்கூறி அப்பாவின்கண்ணது [5]இவ்விறுதியென்றான்; எனவே, இனிக் கூறுவதாகின்றதில்லை தூக்கிற்குவேண்டும் இலக்கணமென்பது. இக்கருத்தினானே தூக்கினைப் பாவெனினும் அமையும்.

"பாவென மொழியினுந் தூக்கினது பெயரே."

எனப் பிறருஞ் சொல்லுப.

அகவலோசைக்கண் தூக்குவருங்கால் இருசீர்முதலா எண்சீர்காறும் பரந்துபட்ட அகவலோசையை நாற்சீர்க்கண்ணே துணித்துக்கொள்ள, அஃது ஆசிரியத்தூக்காமென்றவாறு. இருசீரால் துணிப்ப ஆசிரியவோசையாகாது; முச்சீரால் துணிப்பினும் ஆசிரியவோசையாம்; என்னை? ஈற்றயலடி முச்சீர்த்தாமெனவும், இடையும் வரையாரெனவுங் கூறினமையின்.

1. இற்றது—முடிந்தது.
2. பாடல்—அவ்வரையறை அளவைச் சொல்வல்.
3. கூறுபாடறிதல்—வரையறுத்தல்.
4. ஓடுவது—ஓதுவது என்றும் பாடம். அதுவே பொருத்தம்போலும். ஓதுதல்—சொல்லுதல், அவ்வத் தூக்கை ஓதுதல்.
5. இவ்விறுதி-என்பது இவ்வாறுதி என்று காணப்படுகின்றது. அதுவே பொருத்தம். S. கனகசபாபதிப்பிள்ளை பதிப்பு நோக்குக.



நிறுத்தல், அடிவகையானே அறுதிபுணர்த்து மாகலின் தூக்கு ...ன்செய்யுமெனின்,—அவ்வடியினையுத் தூக்கானன்றி உணர்த்த ...காது; என்னை? இருசீர் முதலாகப் பலசீர் தொடர்ந்த ...டித் [1]தூக்கு அறுப்புக்கொண்டன்றி இத்துணைச்சீர்கொண்ட ...டி இஃதென்பது அறியலாகாமையின். அல்லதூஉம், ஆசிரி...த்துள் எண்சீர் தொடர்ந்தும் பாச்சென்றவழி அதற்கு வரு...மைப்பட்ட முச்சீரடியும் ஐஞ்சீரடியுமாகாது நாற்சீரடி இரண்...டென்று அறிதற்குக் கருவி தூக்கென்பது கொள்க; அஃ...ர்க்கால்,

"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
பலங்குருகை வீந்தின் சிலம்பிபொறி செங்காய்." (ஐங்குறு)

என்றவழி, 'உள்ளார்', 'முள்ளுடை' என்பன அடியெதுகை...க முச்சீரடியும் ஐஞ்சீரடியு மெனக்கொண்டு மயக்கமா...மென்பது.

"நாந்த நாறுந் தன்கையாற்
[2]புலவுநாறு மென்றலை தைவரு மன்னே." (புறம் ௨௩௫)

என்றவழி, எண்சீரான் இரண்டு நாற்சீரடி வந்தனவென்று ...காடுமன்றே தூக்கின்றுபினென்பது.

தூங்கலோசை அளவைபோல நாற்சீரடிக்கணன்றி இரு...ர்க்கண்ணும் சிறுபான்மை முச்சீர்க்கண்ணும் தூக்குக் கொள்...ப்படும். அங்ஙனம் கொள்ளாக்கால் இருசீரடியெனவும் முச்...ரடியெனவுந் தூக்கின்றி [3]இடைதெரியப்படாவென்பது. (௯௯)

[தொடைவகை இவை எனல்]

௱. மோனை யெதுகை முரணே யியைபென
நானெறி மரபின தொடைவகை யென்ப.

இது,

"மரபே தூக்கே தொடைவகை எனாஅ." (௧.கட)

...ன நிறுத்தமுறையானே, தூக்குணர்த்தித் தொடைவகை ...ணர்த்துவானெழுந்தான். அவைதாம் இவையெனப் பெய...ம் முறையுந் தொகையு முணர்த்துதல் நுதலித்து.

1. தூக்கு அறுப்பு—தூக்கினது அறுப்பு.
2. புலவு என்பதை முன்னடியோடு சேர்ப்பின் நாற்சீரடியாம்.
3. இடை—வேறுபாடு; அளவுமாம்.

இ—ள்: மோனைத்தொடையும் எதுகைத் தொடையும் முரண்டொடையும் இயைபு தொடையுமென நான்குவகைப் படும் தொடை என்றவாறு.

'நெறி மரபு' என்பது, நெறிப்பட்ட தொடையிலக்கணம் இதுவென்றவாறு. எனவே,

"அளபெடை தலைப்பெய வைந்து மாகும்." (௪௦௧)

என்றவழி, இதுபோலச் சிறந்ததன்று அளபெடைத்தொடை என்பதாம்; என்னை? அதுவும் வழுவமைத்துக்கொண்ட எழுத்தாகலானென்பது. 'தொடைவகை' என்பது தொடைப்பகுதி பலவுமென்றவாறு. அவை மேற்கூறுமாற்றான் மோனைநான்கும், எதுகை பதினைந்தும், முரண் ஐந்தும், இயைபு இரண்டுமென்று இவ்வகைப்படுதலும், இனி ஈண்டு எண்ணப்பட்ட தொடைப்பகுதிகளும் அறுநாற்றிருபத்தைந்தடியினையும் ஒரோவொன்றாகத் [1] தம்மொடு தம்மைத் தொடுப்பனவும், அவைதம்மொடு பிறவந்து தொடுப்பனவும், [2] ஓரடிக்கண்ணே தொடுப்பனவும் அவற்றைக் கட்டளையடி யல்லனவற்றும் [3] ஈறாய் விராய்த் தொடுப்பனவும், கட்டளையடியல்லனவற்றைத் தம்மொடு தம்மைத் தொடுப்பனவும், தம்மொடு [4] பிறவந்தது தொடுப்பனவுமென இன்னோரன்ன பலவுமுள. அப்பகுதியெல்லாம் அறிவித்தற்குத் 'தொடைவகை' என்றானென்பது. (௮௮)

[அளபெடையோடு தொடை யைந்துவகை எனல்]

௪௦௧. அளபெடை தலைப்பெய வைந்து மாகும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி.

இ—ள்: அந்நான்கேயன்றித் தொடைவகை ஐந்தெனவும்படும் அளபெடைத் தொடையோடு தலைப்பெய்ய என்றவாறு.

1. தம்மொடு தம்மை—எடுத்த அடியோடு அந்த அடியை.

2. ஓரடிக்கண்ணே தொடுப்பன—முரண், பொழிப்பு, ஒரூஉ முதலிய.

3. ஈறாய்—ஈற்றில் வைத்து.

4. பிறவந்தது—என்பது பிறவற்றை என்றிருப்பது நலம்.



அளபெடை எழுத்தோத்தினுள் [1] வேறு எழுத்தெனப் படாமைச் சிறப்பின்மை நோக்கி, ஈண்டுமதனை வேறுபோதந்து கூறினானென்பது; என்றார்க்கு, மேலைச்சூத்திரத்து நானெறி மரபினவெனத் தொகை கூறினமையின், ஈண்டு அளபெடையுந் தொடையாமென அமையும். நான்கின்மேல் ஒன்றேறியக்கால் ஐந்தாமென்பது ஈண்டுச் சொல்லவேண்டுவதன்று பிறவெனின்,—அற்றன்று; நான்கினோடு ஒன்றினையே சொல்லு கின்றானாயின் அது கடாவாவது; ஐந்தெனவும் ஆறெனவும் படுமென்றற்கு இது கூறினான்; எனவே, உயிரளபெடையும் ஒற்றளபெடையுமென அளபெடை இரண்டாகவென்பது. அஃதே கருத்தாயின், ஆறுமாகு [2] மென்பினெனின், அங்ஙனங் கூறின் உயிரளபெடையோடு ஒத்த சிறப்பிற்றாவான் செல்லும் ஒற்றளபெடையென மறுக்க. உயிரின் பின்னது ஒற்றாகலான் எடுத்தோத்துப் பெறுவது உயிரளபெடையெனவும், உம்மையாற் பெறுவது ஒற்றளபெடையெனவுங் கொள்க. [3] உம்மை எச்சவும்மை. ஒற்றளபெடை மூன்றுபாவினுஞ் செல்லாது; கலிப்பாவினுள் அளபெடையான் [4] நில்லாமையினென்பது.

[வேறுந் தொடையுள எனல்]

௪௦௨. பொழிப்பு மொரூஉவுஞ் செந்தொடை மரபு
மமைந்தனர் தெரியி னவையுமா ருளவே.

இதுவும் அது.

இ—ள்: மேற்கூறிய ஐந்துமேயன்றிப் பொழிப்புத் தொடையும், ஒரூஉத்தொடையும், செந்தொடையுமென இவையுமுள என்றவாறு.

செந்தொடை மரபென்பது செந்தொடை யிலக்கணம் என்றவாறு.

1. வேறுஎழுத்து—முப்பத்துமூன்றைவிட வேறான எழுத்து. முப்பத்துமூன்றென வேறோரெழுத்தாக வேண்டிற்றிலர் என்றபடி. வேறெழுத்தெனப்படாமையாகிய சிறப்பின்மை என்க.

2. என்பினெனின்—என்னுமெனின் என்றிருப்பது நலம்.

3. ஐந்துமென்றதிலுள்ள உம்மை ஆறுமாகுமென்பதை எதிர்தழீஇ நிற்றலின் எச்சவும்மை.

4. நில்லாமையிற் செல்லாது என இயைக்க.

'அவன்மக்கனர் தெரியின்' என்றதனுன், அமையுமாற் ருன் அமைத்துக்கொள்ளப்படும்; யாங்ஙனம்? பொழிப்புத் தொடையும் ஓரடியுள்ளே வருமெனவும், செந்தொடை ஓரடியுள் வரினும் இரண்டடியானன்றி வாராதெனவுங் கொள்க. இக் கருத்துநோக்கி, இவை ஈண்டுப்போதந்து கூறினுனென்பது.

'அவையுமா ருளவே' என்ற உம்மையான் [1] இவை போல ஓரடிக்கண்ணேவரும் முற்றெதுகையும், கீழ்முற்றெது கையும், [2] இரண்டந்தாதியும், இருவகை விட்டிசைத்தொடை யுங் கொள்ளப்படும். (௯௦)

[இவையுந் தொடையுள எனவும் இவை முற்கூறிய தொடைகளுள் அடங்கு மெனவும்]

௪௦௬. நிரனிறுத் தமைத்தலு மிரட்டை யாப்பு
மொழிந்தவற் றியலான் முற்று மென்ப.

இது, நிரனிறைத் தொடையும் இரட்டைத் தொடையு மென இரண்டுதொடைகூறி, அவை முற்கூறிய தொடைப்பாற் படுமென்று அடக்கக் கூறுகின்றது.

இ—ள்: நிரனிறைப் பொருள்வகையால் தொடுக்குந் தொடையும், வந்தசீரே நாற்கால் தொடுக்குந் தொடையும் முன்னைத் தொடைப்பாற்பட்டு அடங்கும் என்றவாறு.

யாந்த வெனினும் தொடுத்தவெனினும் ஒன்று.

"அடல்வே லமர்நோக்கி நின்முகங் கண்டே
[3] யுடலு மிரிந்தோடு மூழ்மலரும் பார்க்குங்
கடலுங் கனைமிருகு மாம்பலும் பாம்புந்
தடமதிய மாமென்று தாம்"

என்றவழி, உடலுங் கடலுமென நிரனிறைத் தொடைமேற் கூறுமாற்ருன் எதுகைத் தொடையாய் அடங்கும்.

"பரவை மாக்கடற் றொகுதிரை [4] பரவும்
பண்டைச் செய்தி யின்றிவள் வரவும்."

1. இவைபோல—பொழிப்பு முதலியபோல.
2. இரண்டந்தாதி—அசையந்தாதி, சீரந்தாதி.
3. கடல் உடலும், இருள் இரிந்தோடும், ஆம்பல் மலரும், பாம்பு பார்க்கும் என நிரனிறையாம்.
4. பரவும் வரவும் என நிரனிறுத்தல் இயைபு தொடைப் பாற்படும். பரவும் என்பது வரவும் என்று கனகசபாபதிப்பிள்ளை பதிப்பிற் காணப்படுகின்றது.



னை இவ்வாறு நிரனிறுத்தலும் ஒன்று; அஃது இயைபின் பாற்படுமென்ப. ஒழிந்தனவும் அன்ன.

இரட்டைத் தொடை என்பது, ஒரு சொல்லே நான்கு முருமாகி வருமென்பது; அது,

"ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்."
(யா. வி. ப. ௧௮௦)

என்வரும். இது குறைவிற்றிரட்டை; இயைபுத்தொடையாய் அடங்கும்.

"பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ
பாவிற் சிறந்த புலவர்கள் பாடுகோ."
(யா. வி. ப. ௧௮௧)

என்பது, நிறைவிற்றிரட்டை: இதுவும் இயைபாய் அடங்கிற்று.

[1] செந்தொடையாய் அடங்குவன உளவேற் கண்டுகொள்க.

மற்று இவை இவ்வாறு அடங்குவனவற்றை வியந்தோ தியது என்னையெனின்,—இவையுந் [2] தொடைப்பாடு கண்டு வழுத்துளை ஐயமறுத்தா னென்பது; எனவே, [3] ஒழிந்த பொருள்கோள் தாமேயின்று தொடைப்பாடுநாட்டி ஐயஞ்செய் யாமையின் அவை கூருனுயினுனென்பது. நிரனிறையாயின் இனைத்தென்றெண்ணி நிறுத்தபொருட்கேற்ப, எதிர்பொரு ளும் எண்ணி நிறுத்துச் செய்யப்படுதலின் அது வேறு தொடையாங்கொலென்று ஐயஞ்செல்லுமென்பது.

'மொழிந்தவற் றியலான்' எனவே, தனக்கு [5] வேறியல் இல்லாத செந்தொடை நீக்கப்பட்டது. பொழிப்பும் ஒரூஉவும் போல ஓரடியுள்ளின்றுந் தொடையை செய்யினும் அவை முற் றாய் அடங்கும்; ஈரடிக் கூட்டத்துத் [6] தத்தம் வகையால் தொடைமை செய்யாவென்பது. (௯௧)

1. நிரனிறையும் இரட்டையும் செந்தொடையாய் என்க.
2. தொடைப்பாடு—தொடைப்படுதல்.
3. ஒழிந்த பொருள்கோள்—நிரனிறையொழிந்த பொருள் கோள்.
4. இனைத்து—இவ்வளவு.
5. வேறியல்பு—வேறு தொடையா மியல்பு.
6. தத்தம் வகையால் தொடைமை செய்யாவென்றது நிர னிறைத்தொடை, இரட்டைத்தொடை எனத் தொடைமை

நிரையசிரியுமாதலான், அவற்றுள் [1] நேரசை பதினொன்றும் ஓரோவொன்று பன்னிரண்டடி உறழுங்காற் பெருகியநிலத்தின் இவ்விரண்டடியாக இருபத்திரட்டடியாம், இனி நிரையசை பதின்மூன்றற்குஞ் சுருங்கிய நிலத்தின் ஓரோவொன்றாகப் பதின்மூன்றடியுமென நாற்பத்தோரடியுந் தம்மொடுதாம்வந் திரட்டிக்குங்கால் தளைவழுப்படுதலின், அவை தொடுக்கப்படா வென்பது.

இனி, வெண்பாவடி உறழுஞ்சீர் இருபத்தேழனுள்ளும் [2] நேரசைச்சீர் பதினொன்றுஞ் சுருங்கியநிலத்தான் ஓரொன்றாகப் பதினொன்றடியும், நிரையசைச்சீர் பதின்மூன்றனுள் ஒன்ப தொழித்து ஒழிந்த நான்குசீரும் நின்றுறழ்ந்த அடியுட் பதி னொன்கெழுத்தடி. [3] பெருகிய நிலத்தான் நான்குமாகப் பதினெட் டடியுந் தம்மொடு தம்மை இரட்டித்துத் தொடுப்பத் தளை வழுவுமாகலிற் களையப்படுமென்பது.

நிரையசைச்சீர் நான்குமாவன :—

வரகு வலியது கடியாறு விறகுதீ என்பன.

ஒழிந்த நிரையசை ஒன்பதுசீரும் நின்று உறழ்ந்த அடி எஞ்ஞான்றுங் களையப்படாது தொடைப்படு மென்பது; அவை ஒன்பதுமாவன :—அரவு புளிமா கணவிரி பெருநாணு உருமுத்தீ மழகளிறு நரையுருமு [4] புலிசெல்வாய் குளிறுபுலி எனவிவை.

---

1. நேரசை பதினொன்றும் பெருகிய நிலத்தில் இவ்விரண்டு அடி தளை வழுப்படக் களையுநிலம் ௨௮ ஆகும். நிரையசை பதின்மூன்றும் சுருங்கிய நிலத்தில் ஒவ்வோர் அடி தளைவழுப் பட ௧௩ ஆகும். பெருகியநிலம் என்றது எழுத்துக்கள் எண்ணின் மிகுந்த நிலத்தை. சுருங்கிய நிலம் என்றது எழுத்துக் கள் எண்ணிற் குறைந்த நிலத்தை. மோனைத்தொடை ஆசிரியத்தில் நேரசைச்சீரில் ௨௮-ம் நிரையசையில் ௧௩-ம் ஆக ௪௧ நிலம் வழுப்படும்.

2. வெண்பாவில் நேரசைச்சீர் ௧௭-ம் நிரையசைச்சீர் ௧-ம் ஆக பதினெட்டுநிலம் வழுப்படும் ஆகவே வழுப்படு நிலம் இரண்டுபாவினும் ௪௧+௧௮=௫௯ ஆகும்.

3. பெருகியநிலத்துள் என்பது முற்பதிப்புக்களில் தவ றிற்று.

4. புலிவருவாய் என வருதல்வேண்டும். பின் உறழ்ந்து காட்டுமிடத்துப் புலிவருவாய் என வருதலின்.



[1] வரகு நிரையுருமு காருருமு பாதிரி
எனவும்,
வலியது கடியாறு காருருமு பாதிரி
எனவும்,
கடியாறு தேமா நரையுருமு காருருமு
எனவும்,
விறகுதீ தேமா புலிவருவாய் காருருமு
எனவும், இப்பதினொன்கெழுத்தடி நான்குந் தொடுக்குமாறில்லை. ஒழிந்த நேரசையும் இவ்வாறே சுருங்கிவரினுந் உறழ்ந்தவடி தொடுக்குமாறில்லை யென்பதூஉங் கண்டுகொள்க.

இனி, களையப்படாத நிரை முதற்சீர் ஒன்பதனுள்ளுஞ் சுருங்கிய எழுத்துச்சீர் [2] ஒன்பது. பெருகிய எழுத்துச்சீர் :— நரையுருமு புலிவருவாய் என்பன. அரவு வரகு வரகு வரகு எனவும், அரவு புலிவருவாய் காருருமு தேமா எனவும் இவை முதலும் முடிவுங் காட்டிய அடிக்கண் அவைதம்மொடு தம்மைத் தொடுக்கப்படுதலிற் களையுநிலை யிலவாயின.

நரையுருமு வண்டு வரகு வரகு எனவும் நரையுருமு காருருமு பாதிரி தேமா எனவும் ஈரெழுத்துச்சீர் முதலும் முடிவுங் காட்டிய அடி களையப்படாது தொடைப்படுமென்பது; புலிவருவாய்க்கும் இஃதொக்கும். ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

இவ்வாற்றான் [3] அறுநூற்றிருபத்தைந் தடியுள் ஐம்பத் தொன்பது நிலங்களைந்து ஒழிந்தவடி ஐந்நூற் றறுபத்தா

---

1. வரகு நரையுருமு காருருமு பாதிரி இது பதினொன் கெழுத்து வெண்பாவடி. இதனை மீளவும் வரகு நரையுருமு காருருமு பாதிரி எனத் தந்து தொடுக்குங்கால் நிரையும் நிரை யும் ஒன்றி ஆசிரியத்தளையாகி வழுப்படும். ஆதலால் தொடுக்கு மாறில்லை என்றபடி. வலியது முதலியவற்றுலாய அடியும் இப் படி ஒன்றோடொன்று தொடுக்கப்படா என்றபடி. வலியது கடி யாறு என்பது வலியது காருருமு எனத் திருத்தப்படவேண்டும்.

2. ஒன்பது ஏழு என்றிருத்தல்வேண்டும்; பின் ஒன்பதுள் இரண்டுசீர் சொல்லப்படுதலின்.

3. ௬௨௫ அடியுள் தளைவழு ௫௯-ம் களைய மோனைத் தொடை ௫௬௬ ஆகும்.

| | | |
|---|---|---|
| ௧-வது | மோனைத்தொடை | ௫௬௬ |
| ௨-வது | தலையாகெதுகை | ௫௬௬ |
| ௩-வது | அடியெதுகை | ௫௬௬ |
| ௪-வது | எழுத்தடியியைபு | ௫௬௬ |
| ௫-வது | சொல்லடியியைபு | ௫௬௬ |
| | ஆக ஐந்தும் | ௨௮௩௦ ஆம். |

யெனக் கொள்க. மற்று [1]'நுந்தை தந்தை' என்றவழி, ஆண்டு முதனின்ற மோனை சிறந்ததன்றாமோவெனின் அன்று மன்றே, [2]இரண்டாயவழி [3]ஒரெழுத்தாந் தேமாவாகலே பெரும்பான்மையாகலின். இதனையே, இது தலையாகு மோனை யெனத் தலைமைகூறப்பட்டதாயிற்று ; என்னை? தொடை என்பன, 'பூந்தொடை' போலச் செய்யுட்குப் பொலிவுசெய்ய வேண்டுமாகலின் ; இக்கருத்தினானன்றே சொல்லடியினையினைத் தலையாகினையெனத் தலைமைகூறாயிற்றென்பது ; அடியெதுகை யாயின் தலையாகெதுகைபோலச் சிறந்ததாகாதென்பது. செந் தொடையுஞ் செய்யுட்பொலிவு செய்யுங்காற் [4]கொன்றையுங் கடம்பும்போல நின்றவாறே நின்று தொடைப்பொலிவு செய்யு மென்பதாம். [5]அநுவுங் கிளையெனப்படுமோவெனின்,—அது வுங் கிளைமைபற்றியல்லது அநுவாகாதென்றற்கு இவற்றொடுங் கூறினனென்பது.

ஈண்டு ஓதிய கிளை உயிரும் ஒற்றுமெனை இரண்டாகலின் அவ்விருவாற்றானுங் கிளைமைபற்றி அநுக்கொள்ளப்படும். என்னை?

"அஆ வாயிரண் டங்காந் தியலும்." (தொ. எழு. பிற. ௩)

என அகர ஆகாரங் கிளையாயின. ஐகார ஔகாரம் போலி வகையான் [6]அவையெனப்படும். இஈ எஏ என்பனவும் உஊ ஒஓ என்பனவும் உடன்பிறப்பினவாகலின் அவையுங் கிளை யெனப்படும். ஒற்றுக்கிளை யென்பன தம்முன்னர்த் தாம்

1. நுந்தை தந்தை என்பது நுந்தை நுந்தை என்றிருப்பது நலம். என்னை? நுந்தை என முதலடியில் வந்து அடுத்த அடியிலும் நுந்தைவாயினே முதனின்றமோனை முதலொன்றி வந்த அடிமோனையாகும்.

2. இரண்டாயவழி—இரண்டடியாயவழி.

3. ஓரெழுத்துத்தேமா என்றிருத்தல்வேண்டும். குற்றியலுகரம் எண்ணப்படாமையின் அது சிறந்த அடிமோனை எனப் படாது என்றபடி. அது அடியெதுகையாகும். ௪௧௨-ம் சூத்திர உரையுள் 'நுந்தை நுந்தை' என்றும் 'ஓரெழுத்துத்தேமா' என்றுங் கூறப்படல் நோக்குக.

4. கொன்றையுங் கடம்பும் இயற்கையாகவே தொடையாகப் பூத்துப் பொலிவுசெய்வன என்றபடி.

5. அநு-வழி=ஒத்த எழுத்து. தாமோதரம்பிள்ளை பதிப்பில், அநு அநுவென்று காணப்படுகிறது. அது பொருந்தாது.

6. அவை—அகர ஆகாரங்களின் கிளை.



வருதலும் பிறவருதலுமென இரண்டு. அவற்றுள் தம்முன்னர்த் தாம்வருங்கால் வந்த உயிரே வாரா. அவ்[1]வருவழிக்கு ஓதிய உயிரே வேறுபடவருமென்பது. இனி, ஓரடிக்கண்ணுயின் ஐஞ் சீராலும் அறுசீராலும் வந்தவழியிலும் அநுவெனப்படுமென் பது. இனித் தம்முன்னுகப் [2]பிறவருங்கால் வந்த உயிரே வரவும்பெறுமெனக் கொள்க. பிறவருங்கால் ஞகரநகரங்க ளும் மகரவகரங்களுஞ் சகரதகரங்களும் இனம்பற்றிக் கிளையா மென்பது. அவற்றுள், மகரவகரங்கள் இதழ்பற்றிப் பிறத் தலிற் கிளையாயின. இவ்வாறே இஈ எஏ என்பனவும் யகர மும் மிடற்றுவழியாற் பிறத்தலானும் இயல்பு ஒப்புமையா னுங் கிளையாமென்பது.

ஒற்றும், உயிரும், உயிர்மெய்யும் என மூன்றுவகையாற் கிளைமைகூறி மெய்ம்மோனை உயிர்மோனை உயிர்மெய்ம்மோனை யெனவுங் கொள்ளாமோவெனின்,—அவை,

"மெய்பெறு மரபிற் றொடைவகை." (தொ. செ. ௬௦௧)

அன்மையிற் கொள்ளாமென்பது ; அல்லதூஉம், அவை யெல்லாங் கொள்ளிற் செந்தொடை [3]இறுவாய்படுமென மறுக்க. எதுகைக்கும் இஃதொக்குமாறு கண்டுகொள்க.

இங்ஙனம் ஈண்டுக் கிளையெனக் கூறியவற்றுள், எற்புழிக் கோடலென்பதனான் வருக்கமென்பது மோனைக்கும் எதுகைக் கும் உரிமையான், வருக்கமோனை வருக்கவெதுகை யென்று இருவகைப்படும். நெடிலும் அநுவும் மோனைக்குரிய ; உயிரும் வல்லினமும் மெல்லினமும் இடையினமும் ஆயிடையிடுதலும் மூன்றாமெழுத்தொன்றுதலுமென்ற ஆறும் எதுகைக்கே உரிய வாம். இவை பத்துந்தொடையுள்ளும் மோனை மூன்றும் வருமாறு:

[4]"வயங்குகதிர் கரந்த வாடை வைகறை
விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி." (அகம். ௨௪)

1. அநுவிற்கோதிய உயிர்—அ ஆ ஐ ஔ முதலிய உயிர்கள். க கா கை கௌ என வேறுபடவரும் என்றபடி.

2. பிறமெய் வருங்கால் வந்தஉயிரே வருதல்—ச த; ஞ ந எனவருதல். உம்மையால் ச தா; ஞ நா எனவும் வரும்.

3. இறுவாய்படுதல்—இல்லையாதல்.

4. வ—வி வகரவருக்கம்

என்பது எகரவருக்கம் முதற்கண் வந்தமையின் வருக்கமோனை யாயிற்று.

"கலக்கொண்டன கள்ளென்கோ
காழ்கோத்தன சூட்டென்கோ." (யா. வி. ப. ௩௫௬)

என்பதும் அது. இவை நெடுமெய்ப்பின் வருக்கமாகலான் வருக்க மெனப்பட்டன. அஃதேல், [1] உயிர்வருக்கமும் வருக்கமெனப் படாதோவெனின், அங்ஙனங்கொள்ளின் நெடிலும் அனுவும் பிறவும் வருக்கமும் வருக்கமெனப்படுமெனை மறுக்க; அல்ல தூஉம், [2] நெடிலும் குறிலும் ஊர்ந்த மெய்யிரண்டு இயைந்த வழித்தொடையாகல் வேண்டுமன்றேயென்பது; என்றார்க்கு, முதற்கண் உயிர்வந்ததனையோ [3] இன்னதொடை என்றுமோ வெனின், அவை அனுவாகி வருவன வழிமோனையெனவும் அல்லாக்கால் செந்தொடையெனவுங் கூறுபவென்பது. இஃது, ஓரடிக்கண் வரினும் ஒக்குமென்ப தாய்ந்துணர்க.

[4] "மடவரல் மகளிர் பிடகைப் பெய்த
செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்து." (நெடுநல். ௩௯—௪௦)

என்றவழிச் செந்தொடையாவதன்றி மோனைத் தொடைப்பாடின் றென்பது. இவ்வாறே குறிலும் நெடிலும் எதுகையாகாமையின் அவையும் வேண்டுபவிலரென்பது.

[5] "வெள்ளி வள்ளி விளங்கிறைப் பணைத்தோள்
மெத்தென் சாயல் முத்துறழ் முறுவல்."

என்பது வழிமோனை. (நெடுநல். ௩௬—௩௭)

1. உயிர்வருக்கத்தை ஒன்றாகக்கொள்ளின் அனுமோனை என்பதொன்றின்றாம். ஆ என்னும் நெடில் முதலடியில் வந்து அ இரண்டாமடியில் வரின் அது அனுவாகுமன்றி வருக்கம் எனப்படாது. ஆதலின் அது பொருந்தாது. அனுவாய் வந்தவை நெடிலுங் குறிலுமாமாதலின் வருக்கமோனைக்குப் பொருந்தா என்றபடி.

2. கானம்—சனம். என நெடிலுங் குறிலுமூர்ந்த மெய் வரினும் உயிர்பற்றி வருக்கமோனையாகக் கொள்ளவேண்டி வரும். ஆதலானும் அது பொருந்தாதென்க.

3. என்ன தொடை என்றுமிருக்கலாம்.

4. ம+செ—இவற்றில் உயிர்கள் அனுவல்ல. ஆதலின் செந்தொடையாயிற்று.

5. வெ+மெ—வழிமோனை. இனவெழுத்தப்பின்னும் வருவது வழிமோனை.



"ஓங்குதிரை வியன்பரப்பி
னொலிமுந்நீர் வரம்பாக." (மதுரைக். ௧—௨)

என்பதும் அது. இவற்றை அனுமோனையெனினும் அமையும். [1] அவை விகற்பங் கொள்ளாமோவெனிற் கொள்ளாம்.

"முன்னினைத்தந் தெற்றின் முழங்கு கடலோத மூழ்கப்போ
வன்னைக் குரைப்ப னறிவாய் கடலேயென் றழைப்பேனும்."

என்னும் அறுசீரடியினும் எழுசீரடியினும் எண்சீரடியினும் நாற்சீரடியினும் ஒப்ப வருதலானும், [2] எண்சீரடியுள் ஒரு நான்குசீர் அற்றவழி ஒழிந்த நான்கனுள் முதற்கண்ணும் இடைக்கண்ணும் [3] இனம் வந்தால் அவை வந்தவழியெல்லாந் தொடையாகாமையானுமென்பது. பிறவும் அன்ன. எதுகைக் குப்போல இனமோனை கொள்ளா தனிமெய்; மொழிக்கு முத லாகாமையினென்பது.

"கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே." (குறுந். ௨௧௬)

என்பது, வருக்கவெதுகை.

"அந்தக் கள்ள ராதொடு வறுந்தெனப்
பிற்படு பூசலின் வழிவழி யோடி." (அகம். ௭)

என்பது, வல்லினவெதுகை.

"நும்மில் புலம்பினு முள்ளுதொறு நலியும்
தண்வர லசைஇய பண்பில் வாடை." (அகம். ௫௮)

என்பது, மெல்லினவெதுகை.

"மன்னர் மன்ன மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந." (பெரும்பாண். ௪௫௫)

என்பது, இடையினவெதுகை.

1. வழியும் அனுவும் விகற்பங்கொள்ளாமோ எனின் கொள் ளாம் என்க. ஒன்று என்றபடி.

2. எண்சீரடியுள் என்றது 'திருவேயென் செல்வமே தேனே வானோர்—செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதி மிக்க' என எண்சீர் வருங்கால் முதல் நான்கு சீரினு மிற்றுநின்று பின்னுஞ் செழுஞ்சுடரே என வந்தால் ஆண்டும் வேறாகத் தொடை கொள்ளப்படாமையான் அனுவும் வழியும் ஒன்றென்றபடி. அன்றியும் சீர்தோறும் வருதலானும் வந்தவழி எல்லாம் அது வழிமோனைத் தொடையென்று கொள்ளப்படாமையானும் இரண்டு மொன்றென்றபடி.

3. இனம் வந்தால் என்புழி, இனம் இன உயிரும் இன மெய்யும் எனக் கொள்க.

இனி, மூன்றுமெழுத்தொன்றெதுகைக்கு வண்டு, மின்னு, நந்தை, சேற்றுக்கால், நீடுகொடி என்னும் ஐந்து சீரானும் உறழ்ந்த அடி அறுபத்தொழித்து, ஒழிந்தசீர் இருபத்திரண்டானும் பெற்ற அடி இருநூற்றறுபத்துநான்கனுள்ளும், ஒன்பது நேர் முதற்சீரால் பதினெட்டும், பதின்மூன்று நிரை முதற்சீரால் பதின்மூன்றுமாக முப்பத்தொரு நிலங் களைந்து கொள்ளப்பெற்ற ஆசிரியத்தொடை இருநூற்றுமுப்பத்துமூன்று.

இனி, வெண்பாவினுள் நீடுகொடி வாராமையின், வண்டு, மின்னு, நந்தை, சேற்றுக்கால் என்னும் நான்கு சீரும் உறழ்ந்த அடி முப்பத்தொன்றொழித்து, ஒழிந்தசீர் இருபத்துமூன்றானும் பெற்ற அடி நூற்றைம்பதாகலின், அவற்றுள்ளும் நேர் முதற்சீர் பத்தும், வாகு, வலியது, கடியாறு, விறகுதீ என்னும் நான்கும் ஆகப் பதினான்கு சீரானும், பதினாறு நிலங் களைந்து பெற்ற வெண்டொடை நூற்றுமுப்பத்தாறும். இவ் வாற்றான் இரண்டு பாவிற்குங் களையுநிலம் கூறப்பட்டது.

கலிப்பாவினுள்ளுஞ் சேற்றுக்கால் நீடுகொடி என்னும் இரண்டும், மூன்றுமெழுத்தொன்றெதுகைக்கு வாராமையின், ஒழிந்தசீர் இருபத்திரண்டானும் பெற்ற தொடை நூற்றொருபதாம்.

இவ்வாற்றான் இவை மூன்றுபாவின் தொடையுந் தொகுப்ப நானூற்றெழுபத்தொன்பதாம். இம் மூன்றுமெழுத்து ஒன்றுங் கால் இரண்டாமெழுத்து ஒன்றுது வரல்வேண்டும்; அல்லாக் கால் தலையாகெதுகையாமாகலினென்பது.

1 "வண்டுமின்னி ரண்டு நந்தை சேற்றுக்கா னீடுகொடி
யென்றிரண்டு மூன்று மொழித்தியையா—நின்ற
வறுபத்தேழ் சீரா னடித்தொடை நானூற்
றெழுபத்தொன் பானு மியற்கு."

எனவும்,

2 "வந்த பதினொன்று மோழா மிரத்தெழுநா
றென்றென் றுரைக்கப் படும்."

எனவும்,

1. வண்டும் மின்னுமாகிய இரண்டும், நந்தையும் சேற்றுக்காலும் நீடுகொடியுமாகிய மூன்றும் மூன்றுமெழுத்தொன்றெதுகைக்கு வாரா. ஒழிந்துநின்ற ௬௭ சீர்க்கும் அடித்தொடை ௪௭௯ ஆகும்.

2. மேற்கூறிய ௧௩. தொடைக்கும் ௭௨௨௨. 14-வது மூன்றுமெழுத்தொன்றெதுகைக்கு ௪௭௯. மொத்தம்—௭௭௦௧.



1 "நேர்முத லொன்பா னிரட்டி நிரைபதின்மூன்
றாசிரியப் பாமுப்பத் தொன்றகற்றி—நேர்முதற்சீர்
பத்தொடு நான்குவெண் பாவகற்று வாங்கதற்
கற்றன நாற்பத்தைந் தாம்."

எனவும்,

2 "இருநூற்று முப்பத்து மூன்றகவல் வெள்ளைக்
கொருநூற்று முப்பத்தா றொப்ப—வொருநூற்
றொருபதாந் துள்ள லொருமூன்று மூன்று
மெதுகையாற் பெற்றவா மீண்டு."

எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

இனி வருக்கவெதுகை ஆசிரியத்துள் எழுசீர்க்கும், வெண்பாவினுள் ஐந்துசீர்க்கும், கலிப்பாவினுள் நான்குசீர்க்கும் வாரா. அவை வண்டு, மின்னு, போரேறு, மேவுசீர், நீடுகொடி, நாணுத்தளை, நந்தை என இவையேழும் ஆசிரியத்துள் ஆகாதன. இவற்றுள் நீடுகொடி, நாணுத்தளை இரண்டும் ஒழித்து ஒழிந்த சீர் ஐந்தும் வெண்பாவிற்கேலா. அவற்றுள்ளும் வண்டு, மின்னு, நந்தை ஒழித்து ஒழிந்த நான்குங் கலிப்பாவிற்காகாவென வுணர்க. இனி, ஆசிரியத்துள் நேர்முதற்சீர் ஏழும், பதின்மூன்று நிரைமுதற்சீரும் உறழ்ந்த அடி இருநூற்றுநாற்பதாம். இவற்றுட் களையும் நிலம் [3]இருபத்தேழாம். ஆகவே அகவற்றொடை இருநூற்றொருபத்துமூன்று ஆயின. [4]வெண்பாவினுள்

1. நேர் முதற்சீர் ஒன்பதற்கும் 18-ம் நிரை முதற்சீர் பதின்மூன்றற்குப் பதின்மூன்றுமாக ஆசிரியத்திற்குத் தளைவழு ௩௧-ம். நேர் முதற்சீர்க்குப் பத்தும் நிரை முதற்சீர்க்கு நான்குமாக ௧௪ தொடை வெண்பாவிற்கு வழுவாம். அவ் விரு பாவிற்கும் தளைவழு ௪௫ ஆகும்.

2. அகவற்கு —௨௩௩ ⎫
வெண்பாவிற்கு —௧௩௬ ⎬ ௪௭௯-ம் 14-வது மூன்றுமெழுத்தொன்றெதுகை பெறுந் தொடை.
கலிக்கு —௧௧௦ ⎭

3. 15-வது வருக்கவெதுகை. ஆசிரியத்துக் களையுநிலம் நேர் முதலேழற்கும் ௧௪-ம் நிரை பதின்மூன்றற்கும் ௧௩-ம் ஆக ௨௭ நிலம் களையப்படும். ௨௦ சீரும் ௧௨ அடி. உறழ ௨௪௦ ஆகும். தளைவழு ௨௭ களைய ௨௧௩ ஆம்.

4. வெண்பாவில் நந்தை, வண்டு, போரேறு மூன்றும் ௮ அடி உறழும். மின்னு, மேவுசீர் இரண்டும் ௭ அடி உறழும். ௩-ம் ௮ அடி உறழ ௨௪ அடி ஆம். ௨ம் ௭ அடி உறழ ௧௪ அடி ஆம். தொகுப்ப ௩௮ நிலம் வாராதன களைவனவாம். அவற்றோடு வெண்டொடை வழு ௧௩-ம் களையவேண்டும். வெண்டொடை ௧௮௭-ல் வாராத நிலம் ௩௮-ம் வழு ௧௩-ம் ஆக ௫௧ நிலங் களைய ௧௩௬ தொடையாம்.

¹ "நீரோ ரன்ன சாயல்
தீயோ ரன்னவென் னுரனவித் தன்றே." (குறுந். ௯௫)

என்பது பொருளும் பொருளும் முரணியது.

² "தண்ணிய வற்ற தயக்கறக் காணேந்து
வெந்நீர்ப் பொருனைசை இ முன்னிச் சென்றோர்."

என்பது, சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணியது.

³ "நீரீ நஞ்சத் திருமிடற் றொடுக்கிய
அலமரி யன்ன வுடைப்பெருஞ் செல்வர்."

என்பது, சொல்லும் பொருளும் பொருளொடு முரணியது. இதனைச் சொல்லும் பொருளுஞ் சொல்லொடு முரணியது போலப் பொய்ப் பொருளோடு முரணுதல் வேண்டுமென்று கொள்ளற்க.

⁴ "செவ்வேற் சேஎய் திருமார் மறுத்த
கருவிற் கானவன் வரிவை கிலரே, யதுபோல"

என்புழி, சொல்லும் பொருளுஞ் சொல்லொடும் பொருளொடும் முரணியது. பிறவும் அன்ன.

இவை ஐந்துதொடையுந் தளைவகையடிக்கண் வருங்கால் இன்னவாறு வருமென்பது மேற் கூறியவாற்றானே கொள்ளப்படும். இவை விரித்து நோக்கப் பலவாமாறும் விரித்துணர்ந்து கண்டுகொள்க. (௯௫)

[இயைபுத்தொடை இதுவெனல்]

௪௦௮. இறுவா யொன்ற லியைபின் யாப்பே.

இது, முறையானே இயைபிரண்டும் உணர்த்துகின்றது.

இ—ள்: இரண்டடியும் ஈறொத்தல் இயைபுத்தொடைக்கிலக்கணம் என்றவாறு.

---

1. நீருந் தீயும் சொல் முரணாது பொருண் முரணியன.

2. இங்கே தண்ணியல் அற்ற காலம் என்பதில், தண்—குளிர்ச்சி என்று பண்புப் பொருள் தரலின் சொல்லும் பொருளும் ஆயிற்று. வெம் என்பது வெப்பத்தையுணர்த்தாது விருப்பமென்று பொருடந்து அதற்கு எதிர்ப்பொருளாகாமையின் சொல்லாயிற்று.

3. தீ—தீமை. இது சொல்லும் பொருளும். சுவரி—பொருள் அதற்கு எதிராகாமையின்.

4. செவ்வேல், கருவில் என்பனவற்றில் செவ் கரு என்பன பொருளை விசேடித்து நிறப்பொருளில் வருதலின் சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணியது.



வாளாதே 'இருவாயொன்றல்' என்றமையிலும் ஆண்டு ஒன்றுவது பொருளியையின்றி, எழுத்துஞ் சொல்லும் ஒன்றி ¹யடையின் இயைபாமென்பது. எனவே, எழுத்தடியியைபும் சொல்லடியியைபும் எனத் தொடை இரண்டாயின.

"அவரோ வாரார் கார்வந் தன்றே
கொடிதரு முல்லையுங் கடிதரும் பின்றே." (குறுந். ௨௨௧)

என்பது, எழுத்தடியியைபு.

"பரவை மாக்கடற் றெருதிரை வரவும்
பண்டைச் செய்தி யின்றிவண் வரவும்." (யா. வி. ப. ௧௬௫)

என்பது, சொல்லடியியைபு.

இவையும் அடிமோனை போல ²எல்லா அடியோடுந் தொடுக்கப்படுமென்பதூஉம் அவற்றது விரியும் எல்லாம்,

"அடிதொறுந் தலையெழுத் தொப்பது மோனை."
(தொ. செ. ௯௨)

என்புழிச் சொல்லியவாற்றானே கொள்ளப்படும். (௯௬)

[அளபெடைத்தொடை இதுவெனல்]

௪௦௯. அளபெழி னவையே யளபெடைத் தொடையே.

இது முறையே, அளபெடைத்தொடை உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்: அடிமுதற்கண் எழுத்துக்கள் அளபெழுந்தனவாயின், அவை அளபெடைத்தொடை எனப்படும் என்றவாறு.

அவை என்றது, உயிரளபெடையும் ஒற்றளபெடையுமென் றிரண்டென்பது கோடற்கு.

"பாஅ லஞ்செவிப் பணைத்தாள் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கி." (கலி. ௫)

என்பது, உயிரளபெடை.

"கஃஃ றென்னுங் கல்லதர்க் கானிடைக்
கஃஃ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை."

என்பது ஒற்றளபெடை.

---

1. அடையின்—வரின்.

2. எல்லா அடியோடும் என்றது, குறளடி முதலிய எல்லா அடியோடும் வஞ்சியடியோடும் கட்டளையடியல்லாத அடியோடும் என்றபடி. ௪௦௪-ம் சூத்திர உரையை நோக்குக.

இவை கட்டளையடியொடு தொடுக்குங்கால் உயிரளபெடை முந்நூற்றுமுப்பத்துமூன்றாம். அவை மூன்று பாவினும் வருங்கால் [1] உரியசைச்சீர் நான்கும், உரிமுதற்சீர் எட்டும், [2] நிரையசையுமெனப் பதின்மூன்றும் ஒழித்து, ஒழிந்தவற்றுள் வரும்.

அவை ஆசிரியத்துள் நேர்முதற்சீ ரேழும், நிரைமுதற்சீ ரேழும்; [3] வெண்பாவினுள் நேர்முதற்சீரொன்பதும், நிரைமுதற்சீ ரொன்பதும்; கலிப்பாவினுள்ளும் உரிமுதற்சீ ரெட்டொழித்து, நேர்முதற்சீ ரெட்டும், நிரைமுதற்சீ ரெட்டும் எனப் பதினாறு மாக, நாற்பத்தெட்டுச் சீர்க்கண்ணும் வருமென்பது. அங்ஙனம் வருங்கால், ஆசிரியத்து நூற்றுநாற்பத்தேழும், வெண்பாவினுள்

1. உயிரளபெடைக்கு வாராத சீர்கள் :—

உரியசைச்சீர் நான்கு :— வண்டு, மின்னு, வரகு, அரவு.

உரிமுதற் சீரெட்டு :— போதுபூ, மேவுசீர், விறகுதீ, உருமுத்தீ, நீடுகொடி, நாணுத்தளை, குளிறுபுலி, விரவுகொடி.

2. நிரையசையுமென்பது ஓரெழுத்துச் சீரும் என்றிருத்தல்வேண்டும், அன்றி நுந்தை என்றும் இருக்கலாம். ஏனைய பாடங்கள் பிழை. நுந்தை என்றிருத்தல்வேண்டுமென்பதைப் பின்வரு முரைச் சூத்திர வெண்பாவை நோக்குக.

3. வெண்பாவினுள் நேர்முதற்சீ ரொன்பதும் நிரைமுதற்சீ ரொன்பதும் வருமாறு:—

| | | |
|---|---|---|
| நேர்முதற்சீர் ஒன்பது | ஞாயிறு, போரேறு | இரண்டு சீர்க்கும் அ அடியாக கசு அடி. |
| | தேமா, பாதிரி, நன்னாணு, பூமருது, மாசெல்வாய் | ஐந்து சீர்க்கும் எ அடியாக ௩ரு அடி. |
| | மாவருவாய், காருருமு | இரண்டு சீர்க்கும் சு அடியாக கஉ அடி. |
| நிரைமுதற்சீர் ஒன்பது | வலியது, கடியாறு | உ சீர்க்கும் எ அடியாக கச அடி. |
| | புளிமா, மழகளிறு, கணவிரி, புலிசெல்வாய் | ரு சீர்க்கும் சு அடியாக ௩0 அடி. |
| | புலிவருவாய், நனிமுழவு | உ சீர்க்கும், ரு அடியாக க0 அடி. |



நூற்றாறும், கலிப்பாவினுள் எண்பதுமாகி முந்நூற்று முப்பத்து மூன்றாம். அவை ஆசிரியத்துள் இருபத்தொன்றும், வெண்பாவினுட் பதினொன்றுமாக முப்பத்திரண்டு நிலங்களைந்து பெறப்பட்டன.

[1] "உரியசைச்சீர் நான்கு முரிமுதற்சீ ரெட்டு
மளபெடைக்கு நுந்தையோ டாகா—வொருநாற்பத்
தெண்சீரான் முந்நூற்று முப்பத்து மூன்றென்ப
ரொண்சீர் பெருமுறையா னுய்த்து."

எனவும்,

[2] "நேரேழ் நிரையேழ் முதற்சீர் முதற்பாவிற்
கோரேழான் மூவேழ் நிலமிலவா—னேராதி
யொன்ப திரண்டு நிரையாதி வெண்பாவிற்
கென்றிவை முப்பத் திரண்டு."

எனவும்,

[3] "நூறெருடு நாற்பத்தே ழாமகவ னூற்றின்மே
லாறு தொடைவெள்ளைக் காகுமா—லேறுதுள்ளற்
கெண்பதா மீரேழீ ரொன்பஃ தெண்ணிரண்
டென்றுமாம் பாமூன் றிடத்து."

எனவும் இவற்றை விரித்துக்கொள்க.

[4] ஈரொற்றளபெடை கலிப்பாவினுள் வாராது; என்னை? அது துள்ளலோசை தள்ளி நிற்றலின். அங்ஙனமாதல்,

1. உரியசைச்சீர் நான்கு முதலியன முன் விளக்கப்பட்டன. அளபெடைக்கு வருஞ்சீர் சஅ ஆவன :— ஆசிரியத்திற்கு நேர்முதல் ஏழும் நிரைமுதல் ஏழும் வெண்பாவிற்கு நேர்முதல் ஒன்பதும் நிரைமுதல் ஒன்பதும் கலிக்கு நேர்முதல் எட்டும் நிரைமுதல் எட்டும் இந் நாற்பத்தெட்டுச் சீராலும் மூன்றுபாவிற்கும் வரும் உயிரளபெடை முந்நூற்றுமுப்பத்துமூன்று.

**21-வது உயிரளபெடை ௩௩௩.**

2. நேர்முதற்சீ ரேழற்கும் பெருகிய நிலத்துப் பதினான்கு நிலம் களையப்படும். நிரைமுதற்சீரேழற்கும் சுருங்கியநிலத்து ஏழு நிலம் களையப்படும். ஒருசேர இருபத்தொருநிலம் களையப்படும். வெண்பாவிற்கு நேராதி ஒன்பது சீர்க்கும் ஒன்பதும் நிரையாதி இரண்டுசீர்க்கும் இரண்டும் ஆகப் பதினொரு நிலம் களையப்படும். இரண்டு பாவிற்கும் ஒருசேர முப்பத்திரண்டு நிலம் களையப்படும்.

3. அகவலுக்கு நூற்றுநாற்பத்தேழு. வெண்பாவிற்கு நூற்றாறு. கலிக்கு எண்பதுமாக முந்நூற்றுமுப்பத்துமூன்றாகும். பாமூன்றற்கும் வருஞ்சீர்கள் முறையே ஈரேழ் (14) உம், ஈரொன்பதும் (18), எண்ணிரண்டு (16) உம் ஆம்.

4. ஈரொற்றளபெடை :— இரண்டொற்றுச் சேர்த்துவரும் ஒற்றளபெடை. இது துள்ளலோசையைப் பிறப்பியாதாகலின்

